# மரீத் ஹாஜி இஸ்மாயில் சாஹெப் கலை & அறிவியல் கல்லூரி

**கொண்டமல்லி கிராமம், பேர்ணாம்பட் – 635810, வேலூர் மாவட்டம்.**




## முதற் பருவம் பொதுத் தமிழ் - வினா விடைகள்.

| | | |
|---|---|---|
| மாணவரின் பெயர் | : | |
| வகுப்பு | : | |
| தேர்வு பதிவு எண் | : | |
| பாடம் | : | பொதுத் தமிழ் - முதற் பருவம். |
| கல்லூரி | : | மரீத் ஹாஜி இஸ்மாயில் சாஹெப் கலை & அறிவியல் கல்லூரி. |
| உதவிப் பேராசிரியர் | : | சு.அருண் குமார் எம்.ஏ., எம்.பி.ஏ., பி.எட்., எம்.ஃபில்., நெட். |

## பொதுத்தமிழ் – முதல் பருவம்.

### அலகு - 1

1. **பாரத மக்களின் அவல நிலையை பாரதி எங்ஙனம் எடுத்துரைக்கின்றார்?**

**முன்னுரை:**

உயர்ந்த நிலையில் வாழ்ந்துவந்த நம் பாரத நாட்டு மக்கள் தங்களுக்குள்ளே சாதி, மதம் எனும் பல பிரிவினைகளால் ஒற்றுமையின்றி வேறுபட்டு வாழ்கின்றனர். மேலும், எல்லாவற்றையும் கண்டு அஞ்சி வாழ்ந்து தம்முடைய உரிமையையும் நிலைநாட்டாமல் வாழ்கின்றனர் என பாரதி இந்நாட்டு மக்களை எண்ணி நொந்து நெஞ்சு பொறுக்குதில்லையே என்று குமுறுகிறார். அதனை எடுத்தியம்புவதாய் இக்கட்டுரை அமைகின்றது.

**அச்சம் கொள்ளுதல்:**

இப்பாரதத்தில் வாழ்கின்ற மக்கள் பயந்து பயந்து வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் பயப்படாத பொருள் என்று இப்புவியில் எதுவுமே இல்லை எனலாம். அனைத்தையும் கண்டு அஞ்சுகிறார்கள்.

**துன்பம் அடைதல்:**

மாயத் தன்மை கொண்ட பேய் அலைவதாய் எண்ணி அஞ்சுகிறார்கள். இதோ, இந்த மரத்தில் பேய் இருக்கிறது என்கிறார்கள். அந்த குளத்தில் பேய் இருக்கிறது என்கிறார்கள். மலை உச்சியில் ஒரு பேய் உறங்கிக் கொண்டிருக்கிறது என்கிறார்கள். இதனை, நினைத்து நினைத்துப் பார்த்து கவலை கொண்டு துன்பம் அடைகின்றனர். எனவே பாரதி,

“நெஞ்சு பொறுக்குதில்லையே - இந்த
நிலைகெட்ட மனிதரை நினைத்துவிட்டால்”

என்று குமுறுகிறார்.

**மூடநம்பிக்கைகளுக்கு அஞ்சுதல்:**

நம் மக்கள் பேயைக் கண்டு அஞ்சுவதோடு மட்டுமில்லாமல் அதனை விரட்டுகின்ற மந்திரவாதிகளைக் கண்டும் பயம் கொள்கின்றனர். எந்திரம், சூனியம் போன்றவற்றைக் கண்டும் அஞ்சி நடுங்குகின்றனர். இவ்வாறான மூடநம்பிக்கைகளுக்குள் ஆட்பட்டுத் தவிக்கின்றனர்.

**அரசியலுக்கு அஞ்சுதல்:**

மக்களிடமிருந்து வரிப்பணத்தைப் பெற்று மக்களை வழிநடத்துகின்ற அரசியல் தலைவர்களையும் அச்சம் தருகின்ற பேய்கள் என்றெண்ணி மனதில் துன்பம் எய்துகின்றனர்.

**பூனைகள் போல் அடிமையாதல்:**

மக்கள் சிப்பாயைக் கண்டு அஞ்சுகின்றனர். ஊர்ச் சேவகனைக் கண்டும் பயம் கொள்கின்றனர். துப்பாக்கியை வைத்துக் கொண்டு தொலைவினில் யாராவது வந்தாலும் அவர்களைக் கண்டும் பயம் கொள்கின்றனர். சிப்பாயைப்போல யாரனும் ஆடை அணிந்து வந்தால்கூட அவர்களைக் கண்டும் அஞ்சுகிறார்கள். பயத்தில் எழுந்து நிற்கிறார்கள். நம் நாட்டு மக்கள் அந்நியர்களைக் கண்டு பூனைகள் போல ஏங்கி அடிமையாய் அஞ்சி நடக்கின்றனர்.

பிரிவினைகள்:

நம் நாட்டு மக்கள் அனைவரும் இந்தியர் என்ற ஒருமைப்பாட்டினை மறந்து பல்வேறு பிரிவினைகளால் ஒற்றுமையின்றி வாழ்கின்றனர் என்று கூறினால் அது மிகையாகாது.

"கொஞ்சமோ பிரிவினைகள் - ஒரு
கோடி என்றால் அது பெரிதாமோ?

என்று பாரதி கூறுகின்றார்.

ஒரே குடும்பத்தைச் சேர்ந்த தந்தையும் மகனும்கூட கருத்து வேறுபாட்டினால்,

"நெஞ்சு பிரிந்திடு வார் - பின்பு
நெடுநாள் இருவரும் பகைத்திருப்பர்"

என்ற வரிகளில் நீண்ட நாட்களாக பகைமை கொண்டு வாழ்வர் என்று பாரதி கூறுகின்றார்.

சமயப் பூசல்கள்:

சாத்திரங்களை கற்காத சாத்திரப் பேய்கள் சொல்லுகின்ற வார்த்தைகளை உண்மை என நம்பி பயப்படுவார்கள். ஒரேகுலத்தில் பிறந்தவனாக இருந்தாலும் அவனிடம் கருத்து வேறுபாடிருப்பின் அவனை வெறுத்து ஒதுக்குவார்கள்.

"கோத்திரம் ஒன்றாயிருந்தாலும் ஒரு
கொள்கையிற் பிரிந்தவனைக் குலைத்திகழ் வார்"

என்ற வரி இயம்புகிறது.

தங்களை வஞ்சித்து வாழ்கின்ற இழிவானவனை துதிபாடி மனக்கொதிப்புடன் பெரும் சமயப்பூசல்களோடு வேறுபட்டு பெரும் சண்டையிட்டுத் திரிவார்கள்.

வறுமையில் வாடுபவர்கள்:

வறுமையில் மக்கள் வாடித் தவிப்பதனை பாரதி,

"கஞ்சி குடிப்பதற்கு கிலார் - அதன்
காரணங்கள் இவையென்னும் அறிவுமிலார்"

என்கிறார். கஞ்சி குடிப்பதற்குக்கூட விழியில்லாமல் வறுமையில் வாடுகின்றார்கள். ஆனால் நாம் ஏன் வறுமையில் வாழ்கின்றோம் என்ற காரணத்தையும் அறியாமல் வாழ்கின்றார்கள். இத்தகைய மக்களை நினைத்து நினைத்துப் பார்க்கும்போது நெஞ்சம் பொறுக்கவில்லை, வெறுக்கவும் இயலவில்லை என்றும் பாரதி கூறுகின்றார்.

இவ்வாறு வறுமையில் வாடுகின்ற மக்கள் வறுமையினால் பஞ்சத்தில் அடிபட்டு தினம் தினம் பரிதவித்து, உயிர் துடிதுடித்து இறந்து மடிந்து போகின்றார்கள். இவர்களது துயரங்களையும், துன்பங்களையும் தீர்ப்பதற்கு வழியுமில்லாத தீர்வுமில்லாத நிலையே நிலவுகின்றது.

அறிவற்ற விலங்குகளைப்போல் வாழ்கின்றனர்:

எண்ணிலடங்கா சமூக நோயுடையவர்களாகவும், எழுந்து நடப்பதற்குக்கூட வலிமையற்றவர்களாகவும் நம் நாட்டு மக்கள் இருக்கின்றார்கள். தவறான வழிகாட்டுதலால் மக்கள் திசை மாறி துன்பத்தில் சிக்கித் தவிக்கின்றனர்.

வாழ்விற்குத் தேவையான நுணுக்கமான அரிய பெரும் கலைகள் பதினாலாயிரம் கோடி இப்புண்ணிய நாட்டில் இருந்த போதிலும் அவற்றைப் பின்பற்றாமல் அறிவற்ற விலங்குகளைப்போல நம் நாட்டு மக்கள் வாழ்கின்றனர்.

முடிவுரை:

பாரத நாட்டில் வாழ்கின்ற மக்கள் பல்வேறு துயரங்களுக்கு ஆட்பட்டு அஞ்சி வாழ்வதோடு மட்டுமின்றி வறுமையிலும் உழல்கின்றனர். மேலும் பல பிரிவினைகளாலும் பிரிந்து வாழ்கின்றனர். இவ்வாறான மக்களை எண்ணி பாரதி மனம் வருந்தி இக்கவிதையை படைத்தளித்திருக்கின்றார். இதனைக் கண்டு இம்மக்கள் மாற வேண்டும் என்பதே அவருடைய அவாவாகும்.

2. பாரதிதாசன் தமிழின் இனிமையை எவ்வாறு பாடியுள்ளார்?

மனிதன் ஐம்பொறிகளின் வாயிலாக அனுபவத்தைப் பெறுகின்றான். மெய், வாய், கண், ஓசை - இவை முறையே ஐம்பொறிகளுக்குரிய புலன்களாகும். மெய்வழி உறுதல் அனுபவமும், வாய் மூலம் சுவைத்தலும், கண் வாயிலாகக் காட்சி அனுபவமும், மூக்கு மூலம் முகர்தல் இன்பமும், செவி வாயிலாகக் கேட்டல் அனுபவமும் மனிதன் பெறுகின்றான். பாரதிதாசன் ஐம்புல இன்பங்களுடன் வாய், செவி, மெய், கண் என்னும் நான்கு பொறிகள் மூலம் துய்க்கும் இன்பங்களைப் பட்டியலிட்டுள்ளார். மேலும் உறவுமுறைகளையும் வரிசைப்படுத்துகின்றார். இப்பொறிகள் வாயிலாகத் துய்க்கப்படும் இன்பங்களைவிடத் தமிழ் இனிமையானது என்னும் கருத்தைப் பாரதிதாசன் அழகுற விளக்குகிறார்.

கனியும் சாறும்:

பாரதிதாசன், வாய் என்னும் பொறிவழி நுகரப்படும் சுவையின்பங்களைத் தொகுத்துச் சுட்டுகின்றார். இவ்வினிப்புப் பொருள்கள் மிகுவும் சுவையானவை; இயற்கையாக நமக்குக் கிடைப்பவை என்றாலும் தமிழ் தரும் இன்பம் இவற்றினும் மேலானது என்பது கவிஞரின் விளக்கம் ஆகும். அவை உடலுக்கு இனிமை தருவன. தமிழ் உயிருக்கு இனிமை ஊட்டுவது. அவை உடலை வளர்ப்பன; தமிழ் உயிரை வளர்ப்பது என்பது கவிஞர் நமக்கு உணர்த்தும் செய்தியாகும்.

பலாப்பழத்தின் சுவைமிக்க சுளை; முதிர்ந்த கரும்பிலிருந்து பிழியப்பட்ட கருப்பஞ்சாறு; மலர்களிலிருந்து தேனீக்களால் கிடைக்கும் பசுந்தேன்; வெல்லப்பாகு; பசும்பால்; உடலுக்குக் குளிர்ச்சியைத் தரும் இளநீர் - இவை அனைத்தும் இனிமை தருவனவாகும். ஆனால் தமிழ் உயிருக்கு இனிமை சேர்ப்பது ஆகும்.

உடலுக்கும் உயிருக்கும் உள்ள உறவு:

சோலையில் தேன் உண்ண வரும் வண்டுகள் எழுப்பும் ஒலி; ஓடையில் எப்போதும் ஓடிக்கொண்டிருக்கும் தண்ணீரால் ஏற்படும் ஒலி; புல்லாங்குழலிலிருந்து எழுப்பப்படும் இசையொளி; வீணையை மீட்டுவதால் எழும் இனிய நாதம்; செவிமடுப்போர் அறிவை மயக்கும் மழலையர் பேச்சொலி, மகளிர் கொஞ்சும் கொஞ்சல் ஒலி - இவை கவிஞரால் விரும்பப்படுவனவே ஆகும். கவிஞர் இனிமை பயக்கும் இவ்வொலிகளை விரும்புகின்றார். எனினும் தமிழை மதித்துப் போற்றுகின்றார். விருப்பத்தைவிடப் பன்மடங்கு சிறப்புடையது. மதிக்கப்படுதல் ஆகும். தமிழுக்கும் அவருக்கும் உள்ள உறவை உயிருக்கும் உடலுக்கும் உள்ள உறவாக மதிக்கின்றார்.

அறிவியல் உறைவது தமிழ்:

பழகுவதற்கு இனிய அண்ணன் தம்பி முறை - இவ்வுறவு உடன்பிறப்பால் அமைவது, நாம் குடியிருக்கும் வீட்டைச் சுற்றி அமையும் உறவுமுறைச் சுற்றமானது நாம் பழகுவதால் ஏற்படுவதாகும். கருணை மிகுந்த தாய்; பிள்ளையை எப்போதும்

நினைத்துக் காக்கும் தந்தை - இப்பெற்றோர் உறவு பிறப்பினால் உண்டாவதாகும். குயில்போல இனித்துப் பேசும் தன்மை கொண்ட மனைவி - இது இல்லறத்தால் ஏற்படும் பந்தம் ஆகும். அன்பைப் பொழிந்து வளர்க்கப்படும் குழந்தைகள் - இவ்வுறவு மக்கட்பேற்று வழி கிடைக்கும் இல்லற உறவாகும். மேற்சொன்ன உறவுகள் அனைத்தும் உடலோடு தொடர்புடைய புற உறவுகள் ஆகும். ஆனால் தமிழ், கவிஞரின் அறிவினில் உறையும் அகவுறவாகும்.

<u>கவிஞன் எழுத இயலாத தமிழ்:</u>

காட்சி வாயிலாகத் கிடைக்கும் இன்ப அனுபவங்களையும் தொகுத்துச் சுட்டுகின்றார். நீலமணி போன்று சுடர்விடும் வானம்; வானத்தில் குளிர்ந்த ஒளிக்கதிர்களைப் பரப்பிவரும் வெண்ணிலவு; காலைச் சூரியனின் கவின்மிகு காட்சி. சூரியன் தோன்றும் காலத்து கடலின் மேற்பரப்பில் தோன்றும் ஒளிவெள்ளம்; மாலையில் கதிரவன் மறைவால் ஏற்படும் ஒளியில் தோன்றும் மலைகளின் தோற்றம். இவையும் இவை போன்ற இயற்கைக் காட்சிகளும் கவிஞர்களால் கவிதையாகக் கூற இயலும், இவிந்தைக் காட்சிகள் கவிஞர்களின் கற்பனைத் திறனில் அடங்கும் திறன் பெற்றன. ஆனால் எந்த ஒரு கவிஞராலும் தமிழின் வியப்புமிகு தன்மையை கவிதையாக எழுத முடியாது. தமிழ்மொழியின் வியத்தகு ஆற்றல் கவிஞரின் புலமைக்கு அப்பாற்பட்டதாகும். இவ்வாறு கவிஞர் தமிழின் சிறப்பைச் சுட்டுகிறார்.

<u>உடலை வளர்ப்வை - உயிரை வளர்ப்பது:</u>

செந்நெல்லால் ஆக்கப்பட்ட சோறு; பசு நெய்யால் தயாரித்துப் பக்குவம் செய்யப்பட்ட காய்கறிகள்; உண்ணுதற்குத் தயார் செய்யப்பட்ட தானியம் மற்றும் பயறு வகைகள்; கட்டித் தயிர்; மிளகு ரசம்; சுவை மிகுந்ததும் உண்ணுதற் பொருட்டுச் சமைக்கப்பட்டதுமான கிழங்கு வகைகள்; பார்த்த அளவில் நாக்கில் சுவையேறும் அப்பம். இவை இயற்கை நமக்குத் தந்த மூலப் பொருள்களிலிருந்து தயாரிக்கப்படும் உணவுப் பொருள்களாகும். இவை அனைத்தும் தமிழரின் உடம்பைப் பேணி வளர்பனவாகும் ஆனால் தமிழரின் உயிரையும் உணர்வையும் வளர்ப்பது தமிழ் ஒன்றே. இவ்வினிமைப் பொருள்களும் இவை போன்ற பல பொருள்களும் இணைந்து செய்யும் இனிப்பூட்டும் செயலைத் தமிழ் ஒன்று மட்டும் தனித்துச் செய்யும் தகுதியுடையது என்பது கவிஞரது வாதமாகும்.

இவ்வாறு தமிழ் ஐம்புலன்களால் கிடைக்கும் இன்பங்களைவிட மேலானது எனக் கவிஞர் கூறுகின்றார்.

<u>முடிவுரை:</u>

பாரதிதாசன் ‘தமிழின் இனிமை’ எனும் கவிதை மூலமாக தமிழ்மொழி உயிர் போன்ற மொழி என்றும், உடலும் உயிரும் போன்று இரண்டறக் கலந்த மொழி என்றும், உயிரையும் உணர்வையும் வளர்க்கும் மொழி என்றும் தாய்மொழியாகிய தமிழ்மொழியின் சிறப்பினை எடுத்துரைக்கின்றார்.

3. சங்கநாதம் கவிதையில் பாரதிதாசன் எக்கருத்தை முன்வைக்கிறார்?

<u>முன்னுரை:</u>

சங்க காலங்களில் மன்னர், போர் செய்தியையோ அல்லது பிற செய்தி ஏதேனும் அறிவிக்க சங்கு ஊதி மக்கள் கவனத்தைத் திருப்பி செய்தியினைக் கூறுவர். அதுபோல, போருக்குப் புறப்படும் போதும் சங்கு ஊதப்படும். அத்தகைய சங்கிடம் தமிழர்களின்

பெருமையைக் கூறி, அதனைப் பிறரிடம் சென்று கூறுவாயாக என்று பாரதிதாசன் விளிக்கின்றார். அதனை இக்கட்டுரை எடுத்தியம்புகின்றது.

மங்காத தமிழ்:

எங்களுடைய வாழ்க்கை முறையும், எங்களுடைய வளமைத் தன்மையும் என்றுமே மங்காது. ஏனென்றால், தாய்மொழியாகிய தமிழ்மொழி எப்பொழுதும் எங்களோடு இருக்கின்றது என்று பாரதிதாசன் கூறுவதனை,

"எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு"

என்ற வரிகள் மூலம் உணர்த்துவதனை அறிய முடிகின்றது.

ஒன்றான தமிழர்கள்:

எங்கள் பகைவர்கள் எல்லோரும் எங்கேயோ மறைந்துவிட்டார்கள். ஏனென்றால்,

"இங்குள்ள தமிழர்கள் ஒன்றாதல் கண்டே"

என்கிறார். அதாவது, இங்குள்ள தமிழ்நாட்டிலுள்ள தமிழர்கள் அனைவரும் சாதி, மதம், இனம் என்ற வேறுபாடுகளை மறந்து ஒற்றுமையோடு ஒன்றுகூடி இருப்பதனைக் கண்டு, தமிழர்களின் பகைவர்கள் எங்கோ சென்று மறைந்துவிட்டார்கள்.

மூத்த மொழி:

உலகின் மூத்த மொழியாகவும், முதல் மொழியாகவும் பிறந்தது தமிழ்மொழியே என்று பாரதிதாசன் கூறுவதனை,

"திங்களொடும் செழும்பரிதி தன்னொடும் விண்ணோடும் உடுக்க ளோடும்
மங்குல்கடல் இவற்றோடும் பிறந்ததமிழுடன் பிறந்தோம் நாங்கள்"

நிலவு, சிவந்த சூரியன் இவற்றோடு வானம், விண்மீன்கள், மேகம், கடல் இவை எல்லாம் பிறந்தபோதே தமிழ்மொழியும் பிறந்துவிட்டது. அத்தகைய தமிழ்மொழியோடு நாங்களும் பிறந்தோம்.

சிங்கக் கூட்டங்கள்:

ஆண்மைத் தன்மையான வீரம் நிறைந்த சிங்கக் கூட்டம் போன்றவர்கள் தமிழர்கள் என்பதனைச் சிறுமை குணம் படைத்த சிறியோர்களிடம் சென்று நினைவூட்டி சங்கே நீ முழங்குவாயாக என்பதை,

"ஆண்மைச்
சிங்கத்தின் கூட்டமென்றும் சிறியோர்க்கு ஞாபகம்
செய் முழங்கு சங்கே"

என்ற வரிகள் மூலம் அறிய முடிகின்றது.

வீரம் நிறைந்தவர்கள்:

தமிழ்நாட்டில் வாழ்கின்ற தமிழர்கள் மட்டுமின்றி இலங்கையில் வாழக்கூடியத் தமிழர்களும் வீராதி வீரம் நிறைந்தவர்களாகவும், புத்திக் கூர்மை உடையர்களாகவும் விளங்குகிறார்கள் என்பதனை,

"சிங்களஞ்சேர் தென்னாட்டு மக்கள்
தீராதி தீரரென் றூதூது சங்கே!"

என்று கூறி ஊதுவாய் சங்கே என்கிறார்.

அழிவு உறுதி:

பெருமைமிகு தமிழர்களுக்குத் துன்பம் விளைவித்தால்,

"சங்காரம் நிசமெனச் சங்கே முழங்கு!"

நிச்சயமாக அவர்களுக்கு அழிவு உண்டு என்று முழங்குவாய் சங்கே!

வெற்றியையுடையத் தோள்கள்:

கொடுமையான போர்க்களத்தில் போரிடும் பொழுது சாவு எப்பொழுது வேண்டுமென்றாலும் நிகழலாம். இருப்பினும் அப்போரில் கூட சாவினை ஒரு வெற்றி பெறக்கூடிய தோள் வலிமை கொண்ட வீரமுடைவர்களாகவும் தமிழர்கள் விளங்குகின்றனர்.

மூச்சாகியத் தமிழ்:

கங்கை நதியிலும், காவிரி நதியிலும் எவ்வாறு நீர் பெருக்கெடுத்து ஓடுமோ, அதுபோல எங்கள் மொழியிலும் கருத்துக்கள் பெருக்கெடுத்து ஓடுகின்றன. அக்கருத்துக்கள் ஊறி நிரம்பி வழியக்கூடியது எங்கள் உள்ளமாகும்.

வெம்மையான இரத்தம் உடலில் பரவி ஓடும் அளவிற்கு, வீரம் செய்கின்ற தமிழ்மொழி எங்கள் மூச்சாய் விளங்குகின்றது என்பதனை;

"வெங்குருதி தனிற்கமழ்ந்து வீரம்செய் கின்றதமிழ் எங்கள் மூச்சாம்!" என்ற வரி மூலம் பாரதிதாசன் கூறுகின்றார்.

முடிவுரை:

தமிழ்மொழியினால் தமிழர்களின் வாழ்வு செழிக்கின்றது. ஏனென்றால் உலகம் தோன்றியபோதே தமிழும் தமிழர்களும் தோன்றிவிட்டார்கள். பெருமைமிகு தமிழர்கள் ஒற்றுமையோடு வாழ்வதால் அவர்களுக்கு பகை இல்லை. அவர்களை அழிக்க நினைப்பவருக்கே அழிவு உறுதியாகிறது. இத்தகையத் தன்மை கொண்ட தமிழர்கள் வீரம் வாய்ந்தவர்களாகவும் திகழ்கிறார்கள். தமிழ்மொழி தமிழர்களின் மூச்சாய் விளங்குகின்றது என்றும் இக்கட்டுரை வழி அறிய முடிகின்றது.

4. கோவில் வழிபாடு கவிதையில் கவிமணி கூறுவன யாவை?

முன்னுரை:

இறைவனை எங்கு தேடியும் காண முடியாது. உள்ளத்தில் இறைவனைக் கண்டால்தான் வேறெங்கிலும் காண முடியும் என்று கோவில் வழிபாடு எனும் கவிதையில் கவிமணி பாடியிருக்கிறார். இரு தோழிகள் உரையாடிக் கொள்வதுபோல் இக்கவிதையைப் பாடியுள்ளார். அதனை இக்கட்டுரை எடுத்துரைக்கின்றது.

தேவாதி தேவனைக் காணவில்லை.

கோவில் முழுவதும் தேடிப் பார்த்தேன். உயர்ந்த கோபுரத்தின் மீதேறியும் தேடிப் பார்த்தேன். ஆனால், தோழியே, தேவாதி தேவனாகிய அந்த இறைவனை எங்குத் தேடியும் நான் பார்க்கவில்லை. இதனை,

"கோவில் முழுதுங்கண்டேன் - உயர்
கோபுரம் ஏறிக்கண்டேன்
தேவாதி தேவனையான் - தோழி!
தேடியும் கண்டிலனே"

ஏழையாகிய நான் இறைவனைக் கண்டிலனே!

தெப்பக்குளத்திலும், தேரோடுகின்ற வீதியிலும் பார்த்தேன். நான் இறைவனைக் காணவில்லை.

“தெப்பக் குளங்கண்டேன் - சுற்றித்
தேரோடும் வீதி கண்டேன்”

என்று கூறுகின்றார்.

அற்புத மூர்த்தியினைத் தேடினேன்:

சிற்பங்களிலும் சிலைகளிலும் இறைவனைத் தேடிப்பார்த்தேன். நல்ல வேலைப்பாடுடைய சித்திரங்களிலும் தேடிப் பார்த்தேன்.

“அற்புத மூர்த்தியினைத் - தோழி
அங்கெங்கும் கண்டிலனே”
என்னப்பன் எம்பிரானைக் கண்டிலனே!

பொன்னிலும் மணியிலும் தேடிப் பார்த்தேன், நறுமணம் வீசக்கூடிய பூக்களிலும் இறைவனுக்குச் சூட்டக்கூடிய பூமாலையிலும் தேடிப் பார்த்தேன் என்பதனை,

“பொன்னும் மணியுங்கண்டேன் - வாசம்
பொங்குபூ மாலை கண்டேன்”

என்ற வரிகள்மூலம் அறிய முடிகின்றது. என்னப்பனான எம்பிரானைத் தோழி இன்னும் நான் பார்க்கவில்லை என்கிறாள்.

சிதம்பரத்திலும் கண்டேன், அங்கு இறைவன் நடனமாடக்கூடிய சிற்றம்பலத்திலும் தேடிப் பார்த்துவிட்டேன்.

“தில்லைப் பதியுங்கண்டேன் - அங்குச்
சிற்றம் பலமுங்கண்டேன்”

கல்லைக்கூட உருகச் செய்கின்ற அந்த இறைவனை இவ்விடகளிலெல்லாம் தேடிப் பார்த்தும் என் கண்களால் நான காணவில்லை.

பயனொன்றும் இல்லை:

கண்ணிற்கு இன்மையாய்க் காட்சி தரும் வெளிக்காட்சிகளைக் கண்டு மயங்கி விடுகிறாய். அதையே மனதில் கொண்டு மனதை அலையவிடுவதனை,

“கண்ணுக் கினிய கண்டு - மனத்தைக்
காட்டில் அலையவிட்டு
பண்ணிடும் பூசையாலே - தோழி
பயனொன் றில்லை, அடி!

என்ற வரிகள்மூலம் இறைவனை எங்குத் தேடியும் காணவில்லை என்று கூறும் தோழிக்கு அவளுடைய தோழி மற்றொருத்தி பதில் கூறுகின்றாள்.

மனதை அலைய விட்டுவிட்டு அதன் பிறகு செய்யப்படும் வழிபாட்டினால் பயன் எதுவுமில்லை என்கிறாள்.

உள்ளத்தில் உறைந்திருக்கும் இறைவன்:

இறைவன் நம் ஒவ்வொருவரின் உள்ளத்திலும் இருக்கிறான் என்பதை முதலில் நாம் உணர வேண்டும் தோழி! அப்பொழுதுதான் கோயிலுக்குள்ளே குடி கொண்டிருக்கும் இறைவனை நம்மால் காண முடியிம் என்கிறாள். இதனை,

“உள்ளத்தில் உள்ளானடி - அது நீ
உணர வேண்டுமடி

உள்ளத்தில் காண்பாயெனில் - கோவில்
உள்ளேயும் காண்பாயடி"

என்ற வரிகள் உணர்த்துகின்றன.

முடிவுரை:

இறைவனை கோவிலிலும் குளத்திலும் சிற்பத்திலும் தேடிப் பயனில்லை. மனதினை அலைபாய விட்டுவிட்டு வெற்று வழிபாட்டினாலும் பயனில்லை. உள்ளத்தின் உள்ளேயே இறைவன் குடியிருக்கின்றான். அதனை உணர்ந்தால் கோவிலின் உள்ளேயும் இறைவனைக் காணலாம் என்று கவிமணி கூறுகின்றார்.

5. தலைமை தாங்கும் தமிழ் குறித்தெழுதுக.

முன்னுரை:

'தேன்மழை' என்னும் கவிதைத் தொகுப்பிலிருந்து எடுக்கப்பட்ட கவிதையே 'தலைமை தாங்கும் தமிழ்' ஆகும். தமிழ் மொழியின் பெருமையினை சுரதா இக்கவிதையில் எடுத்துரைக்கின்றார். அதனை விவரிப்பதாய் இக்கட்டுரை அமைகின்றது.

பாண்டியர்கள் வளர்த்த மொழி:

வினாக்குறியினை படுக்க வைத்திருப்பதுபோன்ற முறுக்கு மீசையுற்ற பாண்டியர்கள், சங்கம் வைத்து வளர்த்த மொழி நம் தமிழ்மொழியாகும் என்பதனை,

"படுத்திருக்கும் வினாக்குறிபோல மீசை வைத்த
பாண்டியர்கள் வளர்த்த மொழி"

என்ற வரிகள் எடுத்து இயம்புகின்றன.

உயர்வான மொழி:

பரந்துபட்ட கடலின் நீரை ஆடையாக அணிந்திருக்கக்கூடிய இந்த உலகத்தில், கடலின் நீரை உடுத்திருக்கும் உலகத்தில் தலைமை தாங்கும் உயர்ந்த மொழி நம் தமிழ்மொழியாகும்.

தலைமைத் தாங்கக்கூடிய மொழியாக விளங்குவது தமிழ்மொழியே ஆகும்.

தன்னிகரில்லா மொழி:

வெளிநாட்டு மொழிகள் பலவற்றிற்கும் பல்வேறு சொற்களைக் கடனாகக் கொடுத்த மொழி, தன்னிகரில்லாத ஒரே மொழி தமிழ்மொழியாகும்.

ஆதிமொழி:

இவ்வுலகிலே முதன்முதலில் தோன்றிய குமரிக்கண்டம் பல்வேறு காப்பியங்களை ஆதிமொழியாகிய தமிழ் மொழியிலேயே கொண்டிருக்கின்றது.

வள்ளுவனை தந்த மொழி:

அறிவினில் மூத்தவராய் விளங்கக்கூடிய திருவள்ளுவனை ஈன்றெடுத்த மொழியும் இத்தமிழ் மொழியே ஆகும்.

"................................ அறிவில் மூத்த
வள்ளுவனை ஈன்றமொழி தமிழே யாகும்"

என்பதனை இவ்வரிகளால் அறியலாம்.

முதன்முதலில் தோன்றிய மொழி:

இவ்வுலகில் முதன்முதலில் தோன்றிய மொழி தமிழ்மொழியே ஆகும். இதனை,

"தென்பிறந்த பின்மலர்கள் பிறப்ப தில்லை
திசைபிறந்த பின்வானம் பிறப்பதில்லை

மீன் பிறந்த பின்குளங்கள் பிறப்ப தில்லை
வேல் பிறந்த பின்இரும்பு பிறப்ப பதில்லை
தேன்சுரக்கும் தமிழ்பிறக்கு முன்பே மற்ற
தேசத்தார் பேசுமொழி பிறக்க வில்லை"

என்ற வரிகள் உணர்த்துகின்றன.

தேன் தோன்றியபின் மலர்கள் பிறப்பதில்லை. மலர் தோன்றிய பின்புதான் அதனுள் தேன் உருவாகிறது.

திசைகள் பிறந்தபின் வானம் பிறப்பதில்லை. வானம் உருவான பின்புதான் திசைகளை வகுக்க முடிந்தது.

மீன்கள் தோன்றியபின் குளங்கள் தோன்றவில்லை. குளங்கள் உருவான பின்னர்தான் அதில் மீன்கள் உருவானது.

வேல் உருவானபின் இரும்பு உருவாகவில்லை. இரும்பு கண்டுபிடிக்கப்பட்ட பின்னர்தான் வேல் உருவாக்கப்பட்டது.

இதனைப் போலவே, தேன் போன்ற இனிமை வாய்ந்த தமிழ்மொழி பிறக்கும் முன்பே, உலகின் பல நாடுகளில் பிற மக்கள் பேசுகின்ற மற்ற மொழிகள் பிறக்கவில்லை. முதன்முதலில் தோன்றிய மொழி தமிழ்மொழியே ஆகும்.

<u>சிறந்த மொழி:</u>

வானம் தோன்றுவதற்கு முன்பே காற்று பிறக்கவில்லை.

"வானம்பிறக்கும் முன்காற்றுப் பிறந்த துண்டோ?
வையத்தில் தமிழ்போலும் சிறந்த துண்டோ?"

அதுபோல, இந்த உலகத்திலே தமிழ்மொழி போன்ற சிறந்த மொழி வெறொன்றும் இல்லை.

<u>முடிவுரை:</u>

தமிழ் மொழிதான் முதன்முதலி தோன்றிய கண்டமாகிய குமரிக்கண்டத்தில் வாழ்ந்த மக்கள் பேசிய மொழியாகும். ஆதிமொழியாகவும், சிறந்த மொழியாகவும், இந்த உலகத்தில் தலைமை தாங்கும் மொழியாகவும் தமிழ்மொழி திகழ்கிறது.

6. ஆறாவது அறிவு கவிதையில் கவிஞர் அப்துல் ரகுமான் மனிதனின் செயல்களை எவ்வாறு எடுத்துரைக்கிறார்?

<u>முன்னுரை:</u>

'ஆறாவது அறிவு' என்ற கவிதையில். அதன் தலைப்பிலேயே மனிதனின் ஆறாவது அறிவே அவனின் ரணம் என்பதை அப்துல் ரகுமான் குறிப்பிடுகின்றார். ஆறாவது அறிவு மனிதனுக்கு அவன் சுமக்கும் சிலுவையா? என்று வினவுவதாய் இக்கவிதையினைப் படைத்துள்ளார். அதனை எடுத்துக்கூறும் விதமாக இக்கட்டுரை அமைந்துள்ளது.

<u>சிலுவை போன்றது:</u>

இவ்வுலகில் கடவுள் படைத்த உயிரினங்களில் மனிதன் மட்டும்தான் ஆறறிவைப் பெற்றிருக்கிறான். தனக்கு மட்டும் ஆறறிவு என்பதற்காக அவன் பெருமையும் அடைகின்றான்.

"ஆனால் -
உயிரினங்களில்
மனிதன் மட்டும்தான் கவலைப்படுகிறான்

ஆறாவது அறிவு என்பது
அவன் சுமக்கம் சிலுவையா?

ஆனால், ஓரறிவு உயிரினம் முதல் ஆறறிவு உயிரினம் வரை வாழ்கின்ற இப்புவியில் மனிதன் மட்டும்தான் கவலையும் கொள்கின்றான். ஆறாவது அறிவினை அவன் சிலுவையை சுமக்கின்ற சுமையாய் எண்ணுகின்றான்.

<u>காயம் போன்றது:</u>

உயிரினங்களில் மனிதன் மட்டும்தான் துன்பத்தினால், துயரினால் அழுகின்றான். அப்படியென்றால், ஆறாவது அறிவு என்பது அவனுக்குக் காயம் போன்றதாய் அமைவதனை,

“உயிரினங்களில்
மனிதன் மட்டும்தான் அழுகிறான்
ஆறாவது அறிவு என்பது
காயமா?

என்ற வரிகள் உணர்த்துகின்றன.

<u>கன்னக்கோல் போன்றது:</u>

உயிரினங்களிலேயே மனிதன் மட்டும்தான் தவறான வார்த்தைகளால் காயப்படுகிறான். பிறரை காயப்படுத்துகிறான். அப்படியென்றால்,

“ஆறாவது அறிவு என்பது
கன்னக்கோலா?

ஆறாவது அறிவு என்பது கள்வர்களின் கையில் இருக்கும் கருவி போன்று தவறானதாய் அமைகிறது போலும்,

<u>சாத்தானின் எச்சில்:</u>

உயிரினங்களில் மனிதன் மட்டும்தான் பாவம் செய்து வாழ்கின்றான். எனவே ஆறாவது அறிவு என்பது அவனுக்கு சாத்தானின் எச்சில்போல விளங்குகிறது.

<u>தரித்திரம் போன்றது:</u>

உயிரினங்களில் மனிதன் மட்டும்தான் பிச்சை எடுத்துப் பிழைக்கின்றான்.

“உயிரினங்களில்
மனிதன் மட்டும்தான் பிச்சை எடுக்கிறான்
ஆறாவது அறிவு என்பது
தரித்திரமா?”

ஆறாவது அறிவு என்பது அவனுக்கு தரித்திரம் போலாகிறது.

<u>அநியாய கருப்பை:</u>

உயிரினங்களிலே மனிதன் மட்டும்தான் பிறரின் உழைப்பைச் சுரண்டிப் பிழைக்கின்றான். அவனுக்கு ஆறாவது அறிவு என்பது அநியாயம் உருவாகுகின்ற கருப்பைப் போன்றது.

<u>கொடூரத்தின் விளைநிலம்:</u>

உயிரினங்களிலே மனிதன் மட்டும்தான் பிறரின் உழைப்பைச் சுரண்டிப் பிழைக்கின்றான். அவனுக்கு ஆறாவது அறிவு என்பது அநியாயம் உருவாகுகின்ற கருப்பைப் போன்றது.

**கொடூரத்தின் விளைநிலம்:**

உயிரினங்களில் மனிதன் மட்டும்தான் உயிர்க்கொலை செய்யக்கூடிய கருவிகை எல்லாம் கண்டுபிடிக்கிறான்.

"உயிரினங்களில் மனிதன் மட்டும்தான் கொலைக் கருவிகளைக் கண்டுபிடித்தான் ஆறாவது அறிவு என்பது கொடூரத்தின் விளைநிலமா?" அப்படியென்றால் ஆறாவது அறிவு என்பது கொடூரங்கள் பிறப்பெடுக்கின்ற விளைநிலம் போன்றது.

**இருள் போன்றது:**

உயிரினங்களில் மனிதன் மட்டும்தான் மத பாகுபாட்டினால் கடவுளின் பெயர்களைச் சொல்லி பிரிவினைகளால் சண்டை போடுகின்றான். அவனுக்கு ஆறாவது அறிவு என்பது கண்ணை மூடிக்கொண்டால் தோன்றும் இருள்போல, அறியாமை எனும் இருள் போன்றது.

**சிக்கல் விழுந்த நூல் போன்றது:**

ஆறாவது அறிவு என்பது சிக்கல் விழுந்த நூல் போன்றது என்பதனை,

"உயிரினங்களில்
மனிதன் மட்டும்தான் பாலுணர்வையும்
பிரச்சனையாக்கிக் கொண்டவன்
ஆறாவது அறிவு என்பது
சிக்கல் விழுந்த நூலா"

உயிரினங்களில் மனிதன் மட்டும்தான் ஆண், பெண் என்ற பால்பாகுபாட்டையும் பாலுணர்வையும் பிரச்சனையாக்கித் துன்பம் தரக்கூடியவன். சிக்கல் விழுந்த நூலை அவிழ்ப்பது கடினமானது. அதுபோல ஆறாவது அறிவு என்பது சிக்கல் விழுந்த நூல் போன்றது.

**மாறுகண் போன்றது:**

உயிரினங்களில் மனிதன் மட்டும்தான் பூமியில் கோடுகள் கிழித்து எல்லைகள் வகுத்து இனப்பாகுபாடு கொண்டு பகையை வளர்க்கின்றான்.

"உயிரினங்களில்
மனிதன் மட்டும்தான் பூமியில் கோடுகள் கிழித்துப்
பகைமை பாராட்டுபவன்
ஆறாவது அறிவு என்பது
கிறுக்குத்தனமா?"

அப்படிப்பட்ட மனிதனுக்கு ஆறாவது அறிவு என்பது புத்தியை மழுங்கச் செய்யும் கிறுக்குத்தனம் போன்றது.

**வஞ்சக வலை போன்றது:**

அரசியல் என்னும் கலையை கண்டறிந்தவன் உயிரினங்களிலே மனிதன் மட்டும்தான். அப்படியென்றால் ஆறாவது அறிவு என்பது வஞ்சக வலை போன்றதா என்கிறார்.

சுயமரியாதையின் கல்லறையா? அல்லது நோயா? உயிரினங்களில் மனிதன் மட்டும்தான் தீய குண்ம் கொண்டவனா? ஏனென்றால், உயிரினங்களில் மனிதனைத் திருத்தத்தான் தூதர்களும் அவதாரங்களும் வேதங்களும் ஆறாவது அறிவு என்பது

சுயமரியாதையின் கல்லறையா? அல்லது நோயா? அவனைத் திருத்துவதற்காகத்தான் தூதர்கள், பல்வேறு அவதாரங்கள், வேத நூல்கள், நீதிநூல்கள் என்று தேவைப்படுகின்றன. அப்படியென்றால் ஆறாவது அறிவு என்பது மனிதனுக்கு சுயமரியாதையின் கல்லறை போன்றதாகவும் நோய் போன்றதாகவும் உள்ளது.

முடிவுரை:

இவ்வாறான தீய குணங்களைப் பெற்றிருந்தும் உயிரினங்களில் மனிதன் மட்டும்தான்ஆறாவது அறிவைப் பெற்றிருக்கிறான். அதற்காகப் பெருமையும்படுகின்றான். ஆறாவது அறிவின் துணையோடு நல்ல பாதையில் செல்ல வேண்டும். ஆனால் மனிதன் தேவையற்ற பாவச் செயல்களில் ஈடுபடுகின்றான் என்று கவிக்கோ. அப்துல் ரகுமான் சாடுகிறார்.

7. தேசப்பிதாவுக்குத் தெருபாடகன் செலுத்தும் அஞ்சலியாக மேத்தா கூறுவனவற்றை விளக்கி வரைக.

முன்னுரை:

கவிஞர் மேத்தாவுக்குப் பெரும் புகழைத் தேடித் தந்த கவிதை “தேசப்பிதாவுக்கு ஒரு தெருப்பாடகனின் அஞ்சலி” என்பதாகும். இது “கண்ணீர்பூக்கள்” என்னும் அவரது கவிதைத் தொகுப்பில் இடம்பெற்றுள்ளது. எளிய நடையும் கூர்மையான சமூக விமர்சனமும் கொண்டதாக இக்கவிதை அமைந்துள்ளதைக் காணலாம்.

மறக்கப்பட்ட தேசப்பிதா:

தேசம் விடுதலை பெற்று ஆண்டுகள் பல ஓடிவிட்டன. அகிம்சை என்னும் ஆயதத்தைக் கையில் ஏந்தி, தன் வாழ்நாளையும் உயிரையும் அர்ப்பணித்து தேசப்பிதா காந்தியடிகள் பெற்றுத் தந்த சுதந்திர தேசம், அவர் கனவு கண்ட விடுதலை தேசம் இன்று முற்றிலும் மாறிப்போய்விட்டது. ஆண்டுகளுக்கு ஒருமுறை வரும் சுந்திரத் திருநாளில் மட்டுமே நான் அவரை நினைவுக்கூரும் அவலம் தொடர்கிறது.

“உன்னுடைய படங்கள்
ஊர்வலம் போகின்றன
நீ ஏன் தலை குனிந்தபடி
நடுத்தெருவில் நிற்கிறாய்?
வெளுத்துப் போய்விட்ட
தேசப்படத்துக்குப்
புதுச்சாயம் பூசும்
புண்ணிய தினத்தில்
புத்திர தேசத்துக்காக நீ
புலம்புவது என் காதில் விழுகிறது”

நினைவுச் சின்னங்கள்:

தேசப்பிதாவின் சிலைகளும் படங்களும் விடுதலைக்குப் போராடிய வீரத்தியாகிகளின் நினைவுகளும் வெறும் அடையாளங்கள் மட்டுமே! இந்த தேசம் இவற்றை சுதந்திரத் திருநாளில் மட்டும் நினைத்துப் பார்க்கிறது.

“தேசப்படத்திலுள்ள கோடுகள்
விடுதலைக்குப் போராடிய
வீரத் தியாகிகளின்

விலா எலும்புக் கூடுகள்!
அழிக்க முடியாத
கல்லெறி படாத
அந்த நினைவுச் சின்னத்தின்
மூலமே
அவர்களுக்கு நாங்கள்
அஞ்சலி செலுத்தி வருகிறோம்"

காந்தியோடு சேர்ந்து பாடுபட்டு இந்திய சுதந்திரம் வாங்கித்தந்த பிற தலைவர்களையும் நாம் மறந்துவிட்டோம். சுதந்திரம் பெற்றுவிட்டோம் என்று பெருமை பேசுகிறோம். இந்திய தேசத்தின் வரைபடத்தில் உள்ள கோடுகள் நமக்குப் பாடுபட்ட தியாகிகளின் எலும்புகளாகத் தெரிகின்றன. தேசப்படத்தில் உள்ள அந்தக் கோடுகளை யாராலும் அழிக்க இயலாது. அவற்றிற்கு நாங்கள் அஞ்சலி செலுத்துகிறோம்.

<u>ஏழை இந்தியா:</u>

ஆபுத்திரனே! தேசப்பிதாவே! நீ அமுதசுரபியாகிய சுதந்திர இந்தியாவை எங்களுக்கு விட்டுச்சென்றாய்; அதன் வளங்களைச் சுரண்டிச் சுரண்டி இன்று நாங்கள் அதைப் பிச்சைப் பாத்திரமாக மாற்றிவிட்டோம்.

"இந்த மாற்றத்தை நிகழ்த்திய
மந்திரவாதிகள் யார்?"

அதாவது அமுதசுரபி என்ற அட்சய பாத்திரம் அள்ள அள்ளக் குறையாதது மணிமேகலைக் காப்பியத்தில் ஆபுத்திரனிடமிருந்து பெற்ற அமுதசுரபியின் மூலம் மணிமேகலை உலக உயிர்களின் பசித்துன்பத்தைப் போக்கினாள். அதைப்போல் நமக்கு அனைத்தும் கிடைக்கக்கூடிய நமதுநாடு என்ற அமுதசுரபியைக் காந்தி நமக்குப் பெற்றுத்தந்தார். நாம் அதைப் பிச்சைப் பாத்திரமாக ஆக்கிவிட்டோம். நாட்டின் வளம் குறைந்துவிட்டது. அண்டை நாடுகளிடம் கையேந்திக் கடன் வாங்குகிறோம் என்பதை ஆசிரியர் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

<u>ஊழலும் சுரண்டலும்:</u>

தவறுகளைத் தட்டிக் கேட்க பகத்சிங்குகள் இன்று இல்லை, அகிம்சையில் பேரொளியில் பகத்சிங்குகள் மறைக்கப்பட்டுப் போனதால், சுதந்திர மாளிகைக்குள் இன்று சுரண்டல் எலிகள் நுழைந்து தேசத்தையே தின்றுவிட்டன. தங்களை வள்ளல் என்று கூறிக்கொள்வோர்கூட ஏழைகளின் வயிற்றில் அடிக்கிறார்கள்.

"மயிலுக்குப் போர்வை தந்தவனின்
மரபிலே வந்தவர்கள்
எங்கள் மேனியில் கிடக்கும்
கந்தல் சட்டையையும்
கழற்றிக் கொண்டு போகிறார்கள்"

அதாவது பகத்சிங் போன்ற போராட்ட வீரர்களை நாம் சிந்திக்கவில்லை. நம் நாட்டு வளத்தை எலிகளைப்போல் சிலர் மறைந்திருந்து சுரண்டுகிறார்கள். மயில் குளிரால் நடுங்குகிறது என்று தன்னை போர்வையைக் கொடுத்தவன் பேகன். இன்றோ நம் மேனியில் போட்டிருக்கும் சட்டையையும் கழற்றிக் கொண்டு போகிறார்கள். ஆட்டுப்பால் அருந்திய காந்தி! நாங்கள் ஆடுகளை வளர்த்தவர்கள். இன்று ஆட்டு மந்தைகளாகிவிட்டோம். ஆடுகளுக்கு உணவிடுவார் தற்போது இல்லை. பால் கறப்பவர்

மட்டுமே உள்ளனர். ஆடுகளுக்குத் தீவனம் கிடைக்காவிட்டாலும் மேய்ப்பவர்களுக்கு இனாம் கிடைத்துவிடுகிறது. மாட்டை ஆட்டையும் காட்டி இனாம் வாங்கும் மரபு இன்று எங்கும் உள்ளது. விலங்குகள் பட்டினி கிடக்கின்றன.

மக்கள் வாழ்க்கை:

அநியாயங்களைக் கண்டு கண்டு மக்களுக்குப் பழகிப் போய்விட்டது மந்தை ஆடுகளைப்போல மக்கள் ஆகிவிட்டார்கள். மக்களை மேய்க்கும் அரசியல்வாதிகளோ அவர்களின் பசியைப் பற்றிக் கவலைப்படாமல் அவர்களது உழைப்பின் பலனைச் சுரண்டுவதிலேயே அக்கறை காட்டுகிறார்கள்.

"எங்கள்
வயிற்றைப் புறக்கனித்து விட்டுக்
காம்புகளை நேசிக்கிறார்கள்"

மக்களுக்குத் தீவனம் கிடைக்காவிட்டாலும் அரசியல்வாதிகளுக்கு மட்டும் எப்படியோ லஞ்சம் கிடைத்துவிடுகிறது.

"எங்கள் வாழ்க்கை
இருட்டோடு
இல்லறம் நடத்துகிறது"

பரிகாரம் தேடும் பாவிகள்:

சட்டங்கள் சரியாக இல்லை. அதில் பல குறைகள் உள்ளன. சட்டம் என்ற கட்டடத்தில் ஓட்டைகள் விழுந்துவிட்டதால் அது உறுதியாக இல்லை தடுமாறுகிறது. ஏழைகளுக்கு நீதி கிடைப்பதில்லை. அவர்கள் இருளிலேயே வாழ்கிறார்கள். பாவத்தை சுயநலத்துக்காகச் செய்துவிட்டுப் புண்ணிய தலங்களுக்குச் சென்று பரிகாரம் தேடுகிறார்கள். அரசாளுபவர்கள் தலையில் வைரக்கிரீடம் சூட்டப்படுகிறது. ஆனால் ஏழைகளின் - குழந்தைகளின் சிறிய விழிகளில் கண்ணீர் நிரம்பியதால் உப்பு தென்படுகிறது. பாடு படாதவனை இச்சமூகம் பாராட்டுகிறது என்பதைக் கவிஞர் சாடுகிறார்.

வெள்ளி விழா; பொன்விழா:

அயல்நாட்டுப் பொருட்களைப் பயன்படுத்தக் கூடாது என்றும், நாமே நூல் நூற்று ஆடை நெய்து அணிந்து கொள்ள வேண்டும் என்றும் கூறிய காந்தி தானே கைராட்டையால் நூல் நூற்றார். இப்போது தங்க நூல் நூற்று தங்க இழை பதித்த ஆடைகளை அரசியல்வாதிகள் அணிகிறார்கள். ஏழைகள் தங்கள் வாழ்க்கையில் வெள்ளியையும் பார்த்ததில்லை. தங்கத்தையும் பார்த்ததில்லை. தலைவர்கள் கொண்டாடும் வெள்ளிவிழா, பொன்விழா என்பதில்தான் அதைப்பற்றியே கேள்விப்படுகிறார்கள்.

தேசப்பிதா கண்டுபிடித்த சுதேசி ஆயுதமாம் கைராட்டையைச் சுற்றிய சிலர் இன்று கோடிகளில் புரளுகிறார்கள். ஆனால் ஏழை மக்களுக்கோ வெள்ளியும் தங்கமும் விழாக்களின் பெயரில் மட்டுமே வருகின்றன.

வறுமையால் மட்டுமல்ல, நவநாகரிகத்தாலும் அரைகுரையாக உடுத்தும் போக்கு உள்ளது.

"தேசம் போகிற
போக்கைப் பார்த்தால்

பிறந்தநாள் உடையே
எங்கள்
தேசிய உடையாகிவிடும் போல்
தெரிகிறது"

**இந்தியாவின் வறுமை:**

இந்தியத் தலைவர்கள் வறுமையை எப்படியாவது ஒழித்துவிட வேண்டுமென்று பேசுகிறார்கள் தவிர செயலில் ஒன்றுமில்லை. மக்கள் நலத்திட்டங்கள்கூட ஏழை மக்களுக்குப் போகாமல் பெரும் செல்வந்தர்களை நோக்கிச் சென்றால் இந்தியா எப்படி முன்னேறும்? அணைக்கட்டுகளில் உள்ள தண்ணீர் மேடுநோக்கிப் பாய்ந்தால் எப்படி இருக்குமோ அதைப்போல நாட்டின் செல்வம் மேட்டுக்குடி மக்களுக்கே சென்று சேர்கிறது. நாட்டின் செல்வம் கீழ்நிலையில் உள்ள ஏழைகளுக்குக் கொடுக்கப்பட வேண்டும் என்று மு.மேத்தா சாடுகிறார்.

"அணைக்கட்டுகளில்
திறக்கப்படும் தண்ணீர்
பள்ளங்களை ஏமாற்றிவிட்டு
மேட்டை நோக்கியே
பாய்கிறது"

எல்லாமே சேரி:

சேரி என்பது ஊரைவிட்டுத் தள்ளி அமைந்து குறைவான வசதிகளோடு மக்கள் வாழும் பகுதியாகும். இப்படிபட்ட மக்களின் வாழ்க்கையில் மாற்றம் வரவேண்டும் என்று காந்தி பாடுபட்டார். மேலும் சேரியில் ஏழை எளிய மக்களோடு சென்று வாழ்ந்தார். தன் வீட்டில் தங்குவதற்கும் சேரிக்குழந்தைகளுக்கு வாய்ப்பளித்தார். இன்று இந்தியா முழுவதும் சேரியாகவே மாறிவிட்டது என்று கவிஞர் வேதனைப்படுகிறார். நமக்காகப் பாடுபட்டவர்களைப் பாராட்டாது நன்மை செய்யாத மனிதர்களுக்குச் சிலதூண்டுதலால் ஏழைமக்கள் மாலை அணிவிக்கிறார்கள். அரசியல்வாதிகள் தேசத்தையே சேரியாக மாற்றிவிட்டார்கள்! இந்த மாற்றங்களை நிகழ்த்திய மந்திரவாதிகள் அவர்கள்.

**முழுமை பெறாத பாடல்:**

தேசப்பிதாவின் இந்திய தேசத்தின் அவலநிலையைக் காணும் போதெல்லாம்,

"கண்ணீரின் வெப்பத்தால்
என் கவிதை
முழுமை பெறாமலே
முடிந்து விடுகிறது"
என்கிறார் மேத்தா.

**முடிவுரை:**

காந்தி படத்தோடு ஊர்வலம் போகிறார்கள். காந்தியடிகள் கொள்கைகள் பின்பற்றப்படவில்லை. அதனால் சிலையாய்த் தெருவில் நிற்கும் காந்தியைப் பார்த்து, "இதைப் பார்க்கப் பிடிக்காமல் தான் நீ குனிந்து நிற்கிறாயா?" என்று தன் கருத்தைக் கவிஞர் ஏற்றிக் கூறுகிறார். கண்ணீர் பெருகுகிறது. நெஞ்சம் கனக்கிறது. கண்களும் வெப்பத்தால் கனக்கின்றன். தொடர்ந்து கவிதை எழுத இயலவில்லை என்று கவிஞர் புலம்புகிறார். காந்தி கொடுத்ததைப் பிடித்துக் கொண்டு முன்னேறத் தெரியாமல் தவறான

வழியில் நாடு போய்க் கொண்டிருக்கிறது என்பதை மு.மேத்தா நெஞ்சில் கனத்தோடு பகிர்ந்து கொள்கிறார். பாவங்கள் பல செய்துவிட்டு, அவற்றைத் தீர்த்துக் கொள்ள புண்ணிய்ய ஸ்தலங்களும் இருப்பதால் தூசு படாத தூய்மையானவர்களாக பாரத புத்திரர்கள் தம்மைக் கருதிக் கொள்கிறார்கள். இந்த நிலை மாற வேண்டும். இந்தியாவின் அவலம் தீர வேண்டும் என்பதைத் தம் கவிதைவழி உணர்த்துகிறார் மேத்தா.

8. நா. தனராசனின் தூய்மை மலரட்டும் கவிதை குறித்து எழுதுக.

<u>முன்னுரை:</u>

நாட்டில் உள்ள வேற்றுமைகள் நீங்கி ஒற்றுமை பெறவும் அமைதி நிலவவும், தீயவைகள் எல்லாம் களையப்பட்டு நாட்டு மக்களின் நிலை ஏற்றம் பெறவும் 'தூய்மை மலரட்டும்' எனும் கவிதையில் பல கருத்துக்களை முன் வைக்கிறார் கவிஞர். அதனை எடுத்துரைப்பதாய் இக்கட்டுரை அமைகின்றது.

<u>சரித்திரம் படைக்கட்டும்:</u>

வாழ்க்கை என்கிற பயணத்தின் வாசலில் தினந்தோறும் பல இளமைக் கனவுகள் சாதனை படைக்க வேண்டும் என்றெண்ணி பல சந்தர்ப்பங்களை கேட்கின்றன.

"வாழ்க்கைப் பயண
வாசலில் நித்தம்
வாலிபக் கனாக்கள்
சாதனை செய்ய
சந்தர்ப்பம் கேட்கும் - புதுச்
சரித்திர நிலாக்கள்!"

புதுமையான சரித்திர நிலாக்களும் உலா வருகின்றன.

<u>வியர்வைத் துளிகளே விதைகள்:</u>

உழைப்பின் மிகுதியால் தோன்றும் வியர்வைத் துளிகளே, வீரியமிக்க விதைகளாக விளைகின்ற தேசம் எங்களது தேசமாகும்.

"வியர்வைத் துளியின்
வீரிய விதைகள்
விளையும் தேசமிது"

புதிய விடியலின் ராகமும் விவேகமிக்க கீதங்களும் தினந்தோறும் நாங்கள் கேட்டு ரசிக்கக்கூடிய காலமும் இதுவாகும்.

<u>கனவுகள் பலிக்கட்டும்:</u>

உழைப்பு எனும் மரத்தில் பிரிவினைகள் இன்றி பொதுவுடைமைப் பூக்கள் இவ்வுலகெங்கிலும் பூத்து குலுங்கட்டும்.

"கலைப்பு நீங்கி
உழுபவர் வாழ்வில் - புதுக்
கனவுகள் பலிக்கட்டும்"

உழுது வாழக்கூடிய உழவர்களின் வாழ்வில் களைப்பும் சோர்வும் இன்றி புதுமைக் கனவுகள் பலித்து அவர்களது வாழ்வு செழிக்கட்டும்.

__பிரிவினைகள் ஒழியட்டும்:__

**சாதி, மதம் போன்ற பிரிவினைகள் சவக்குழிக்குள் தள்ளப்படட்டும். இதுவரை இருந்துவந்த நிலை மாறி சரித்திரம் மாறி சாதனை எனும் ஏட்டினில் நம் பாரததேசம் இடம்பெறுவது சாத்தியம் என ஆகட்டும்.**

__வாழ்வு சிறக்கட்டும்:__

**இலஞ்சம், ஊழல் இவை இல்லாத நாடாக நம் இந்திய தேசம் மாறட்டும். வஞ்சனை, பொறாமை போன்ற தீய எண்ணங்களை இல்லாத மனிதர்கள் வாழ்ந்து, இந்தியர்களின் வாழ்க்கை புகழ்பெற்றுச் சிறக்கட்டும்.**

__தூய்மை மலரட்டும்:__

**சுற்றுச்சூழல் மாசுபாடுகளைக் களைந்து விழிப்புணர்வு பெற்று தேசம் புதுப்பொலிவோடு ஒளிரட்டும்.**

**"சுற்றுச் சூழல்**
**விழிப்புணர் பெற்று**
**தேசம் ஒளிரட்டும்**
**சுதந்திரக் காற்று**
**சுழன்று வீச - எழில்**
**தூய்மை மலரட்டும்"**

**சுதந்திரமான காற்று பூமியெங்கும் சுழன்று வீசி அழகுமிகுந்த தூய்மை நாடெங்கும் மலரட்டும்.**

__ஏழைகள் வாழ்வு ஏற்றம் பெறட்டும்:__

**ஏழை, பணக்காரன் என்ற ஏற்றத்தாழ்வு, வர்க்கப்பேதம் போன்றவை நீங்கி பூமியெங்கும் அமைதி நிலவட்டும். ஏழைகளின் வாழ்வு ஏற்றம் பெற்று முழுமையான நிலவுபோல களங்கமின்றி தினந்தோறும் ஒளிவீசி மகிழட்டும்.**

__முடிவுரை:__

**சாதி, மத பாகுபாடுகள் களையப்பட வேண்டும். ஊழல், இலஞ்சம் இல்லாத நாடாக நம் நாடு மாற வேண்டும். தூய்மை காற்று எங்கிலும் பரவ வேண்டும். ஏழை பணக்காரன் என்ற ஏற்றத்தாழ்வுகள் நீங்கி பூமியில் அமைதி நிலவட்டும். இவை போன்ற பல சிறந்த கருத்துக்கள் இக்கவிதையில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.**

**9. கவிஞர் சுகிர்தராணி எழுதிய 'எங்கள் வளநாடு' கவிதை குறித்து எழுதுக.**

__முன்னுரை:__

**இலங்கைத் தமிழர்களுக்கு பல்வேறு கொடுமைகள் நிகழுகின்றன. தமிழகத்தில் அக்கொடுமைகள் நிகழவில்லை என்பதால் நாம் அவர்களுக்கு நடக்கின்ற அநியாயங்களைத் தட்டிக் கேட்காமல் வாழ்கிறோம் என்று சுகிர்தராணி தன்னைத் தானே நொந்து கொள்கிறார். அதனைக் குறித்து இக்கட்டுரை அமைகின்றது.**

**வளம் நிறைந்த தமிழ்நாடு**

**தமிழ்நாடாகிய எங்கள் நாடு எல்லா வளங்களும் நிறைந்து காணப்படுகின்ற நாடாகும்.**

__இனப்பிரச்சினை:__

**வளங்கள் நிறைந்த தமிழ்நாட்டில்,**
**"பச்சைத் தமிழன் சிவப்புத்தமிழன்**
**என்னும் இனப்பிரச்சனை இல்லை"**

**இலங்கையில் நிலவுவது போன்று பச்சைத் தமிழன், சிவப்புத் தமிழன் என்ற இனப்பிரச்சினை இல்லை.**

**<u>மொழிப் பிரச்சனை:</u>**

**இலங்கையில் நிலவும் மொழிப் பிரச்சனைப் போன்று, தமிழகத்தில் செந்தமிழ், சென்னைத் தமிழ் என்கின்ற மொழிப் பிரச்சனை இல்லை.**

**<u>புத்த விகாரைகள்:</u>**

**தமிழ்நாட்டில் இலங்கையைப் போன்று,**
**“இரத்தத் தூண்களின் மீது கட்டப்பட்ட**
**புத்த விகாரைகள் இல்லை”**

**தமிழர்களைக் கொன்று குவித்து, அவர்களின் இரத்தத் துளிகள் தெறித்த தூண்களைப் புதைத்து அவற்றின் மீது புத்த விகாரைகள் கட்டப்படவில்லை.**

**<u>தடைசெய்யப்பட்ட ஆயுதங்களைப் பயன்படுத்துதல்:</u>**

**தமிழகத்தில், தடை செய்யப்பட்ட ஆயுதங்களை எல்லாம் பயன்படுத்தி உயிர்க்கொலை செய்கின்ற கொடூர யுத்தம் எதுவுமில்லை.**

**<u>பதுங்குக்குழி</u>:**

**“உயிர்பிழைக்கப்**
**பதுங்கிக் கொள்ளும் குழியுமில்லை”**

**பீரங்கிக் குண்டுகளுக்கும், தோட்டாக்களுக்கும் பயந்து உயிர் பிழைப்பதற்காக பதுங்கிக் கொள்கின்ற பதுங்குக் குழிகள் தமிழகத்தில் இல்லை.**

**<u>போர் நிறுத்தம்:</u>**

**இந்த ஓயாத போர். நிறுத்தப்படாதா என்று ஏங்குகின்ற இலங்கைத் தமிழர்களுக்கு அத்தகைய மாயமாலம் எதுவும் நடப்பதில்லை.**

**<u>சயனைடு குப்பி:</u>**

**“எதிரிகளின் பிடியில் சிக்கும்பொது**
**சயனைடு குப்பியைக் கழுத்திணிந்த மாவீரரில்லை”**

**கழுத்திலணிந்திருக்கும் சயனைடு குப்பிகளை விழுங்கி உயிர் துறக்கின்ற மாவீரர்கள் இல்லை.**

**<u>பெண் போராளிகளின் நிலை:</u>**

**“கொல்லப்பட்ட பிறகும்**
**புணரப்பட்ட பெண் போராளிகளில்லை”**

**கொலை செய்யப்பட்டு இறந்த பின்பும்கூட வக்ரமாக வன்புணர்வு செய்யப்படுகின்ற பெண் போராளிகள் தமிழகத்தில் இல்லை.**

**<u>பிஞ்சுக் குழந்தைகளின் நிலை:</u>**

**எதுவுமறியாத பிஞ்சுக் குழந்தைகளின் மீது குண்டு வீசப்பட்டு வீதியெங்கும் இரத்தம் சிந்தி சிவந்து காணப்படும் செஞ்சோலைகளில்லை.**

**<u>முள்வேலி முகாம்கள்:</u>**

**உயிரைப் பறித்துவிட்ட பிறகு உடலையும் காணாமல் போகுமாறு முள்வேலியிடுகின்ற முகாம்கள் இல்லை. கூட இருந்தே குழி பறிக்கின்ற கருணை இல்லாத நம்பிக்கை துரோகிகள் இல்லை.**

பாலியல் கொடுமைகள்:

வாய்க்காலில் கடத்திச் சென்று பாலியல் வன்புணர்வு செய்த பிறகு பள்ளியறைகளில் யாரும் படுக்காமலில்லை.

மானமற்ற தமிழச்சி:

ஈழத்தமிழர்களுக்கு நடக்கின்ற கொடுமைகளைப்போல் எந்த கொடுமைகளும் தமிழகத்தில் நடக்கவில்லை. ஈழத்தமிழர்களுக்கு எதிராக நடக்கின்ற இக்கொடுமைகள் எல்லாம் நமக்கு நடக்கவில்லை என்பதால் தட்டிக் கேட்காமல் எழுதி மட்டுமே கொண்டிருக்கும் எனக்கு மானமும் இல்லை. நான் தமிழச்சியும் இல்லை என்று சுகிர்தராணி தன்னைத்தானே நொந்து கொள்கிறார்.

முடிவுரை:

தமிழகத்தில் வாழும் தமிழர்களையும் இலங்கையில் வாழும் தமிழர்களையும் ஒப்பிட்டுக் கூறுகிறார். இலங்கையில் தமிழர்கள் அனுபவிக்கின்ற கொடுமைகளை தமிழகத்தில் வாழ்கின்ற தமிழர்கள் அனுபவிக்கவில்லை என்பதனால், அவர்களின் அநியாயங்களைத் தட்டிக் கேட்காமல் வாழ்கின்றனர் என்று சுகிர்தராணி குமுறுவதை இக்கட்டுரையின் வாயிலாக அறிய முடிகிறது.

10. கவிதாயிணி மாலதி மைத்திரியின் ‘அகதி’ என்னும் கவிதையில் கூறப்படும் செய்திகளை விவரி.

முன்னுரை:

கவிதாயிணி மாலதி மைத்ரி அவர்கள் படைத்த ‘அகதி’ என்னும் கவிதையில் மனநலம் பாத்திக்கப்பட்ட பெண் ஒருத்தி, இந்த சமூகத்தில் எப்படி பயணிக்கிறாள் என்பதையே விவரிக்கின்றது.

அகதியின் மனநிலை:

அகதியாக வந்த ஒரு பெண், அவள் மனநிலை பாதிக்கப்பட்டவள். அவளது சடை விழுந்த கூந்தல் பாம்பு நெளிவதுபோல் நெளிகிறது. அவள் தார்ச்சாலை அருகிலுள்ள புளியமரத்தடியில் தங்கியிருக்கின்றாள்; அவள் அங்கு வருபவர்களையும் போகிறவர்களையும், பார்த்து தன்னுடைய கூர்மையான பற்கள் வெளியே தெரியும்படி சிரிக்கிறாள்.

கவிஞரின் பெண்ணியச் சிந்தனை:

அவள் நெகிழிப் பைகளை தன் உடம்பை மறைக்கும் ஆடையாக அணிந்துள்ளாள். அவளது நடை யாருக்கும் அஞ்சாமல் செல்லும் கம்பீரமானத் தோற்றத்தைக் கொண்டிருக்கிறது. அவள் நடந்து செல்லும் பாதை முழுவதும் நெகிழிப் பைகள் உரசிச்செல்லும் சத்தம் அவளைத் தொடர்ந்து செல்கின்றன என்னும் கவிதாயினி மாலதி மைத்ரியின் பாராட்டுக்குரியது.

இலங்கையில் நடைபெற்ற தமிழீழப் படுகொலைகளை தன் கண்முன்னே கண்டு. தனது சொந்தங்களையெல்லாம் இழந்து மனதளவில் பாதிக்கப்பட்ட அகதியென இடம்பெயர்ந்த பெண்ணிவள். மேலும், அவள் தனது உணவுக்காக யாரையும் நம்பி வாழவில்லை. யாரிடமும் கையேந்தி நிற்கவும் இல்லை. மாறாக அவர் கண்ணில் பட்ட இலை தழைகளை அப்படியே பறித்து மென்று தின்று கொண்டே அலைகிறாள் என்பதை,

"யாரிடமும் அவள் கையேந்துவது இல்லை
எல்லாத தழைகளையும் அப்படியே
ஒடித்துத் தின்றுகொண்டே"

என்னும் வரிகளால் அறியலாம்.

அப்பெண் இவ்வாறு அலைந்து கொண்டே ஊர் முழுவதும் சுற்றித் திரிந்து நெகிழிப் பைகளைப் பொறுக்கி எடுத்துக் செல்கிறாள். அவற்றை மூட்டை மூட்டையாகச் சேர்த்து எடுத்துக்கொண்டு புளியமரத்தடியில் தனது உடைமைகளைச் சேர்த்து அடுக்கிவைக்கிறாள் என்பதை.

"மூட்டை மூட்டையாகப் புளியமரத்தடியில்
தனது உடைமைகளை அடுக்குகிறாள்"

என்ற வரிகள் கூறுகின்றன.

பிறகு அவள் சேர்த்து வைத்திருக்கும் மற்ற நெகிழிப் பைகளை புளிய மரத்தின் கிளைகளில் மாட்டித் தொங்கவிட்டிருப்பாள். அது ஏதோ வெற்றிக் கொடி போலவும், யாரையோ வரவேற்க கட்டிவைத்த கொடியைப் போலவும் காற்றில் அசைந்து ஆடிக் கொண்டிருக்கின்றன.

<u>பெண்மையின் அவலம்:</u>

இவள், நன்றாக வெயில் காயும்போது தார்சாலையில் உட்கார்ந்து கொண்டு அங்குள்ள தாரை ஒரு குச்சியால் தோண்டி எடுத்து நெகிழிப் பைகளை ஒன்று சேர்த்து ஒட்டி ஒட்டி புதிய ஆடைகளாகச் செய்து கணக்கில்லாமல் மேலும் மேலும் உடுத்திக்கொள்கிறாள். இது புதாகரமான தோற்றத்தை அவளுக்குத் தருகிறது. அவள் அப்படியே திரிகின்றாள். இப்படி அலைந்து திரிந்து செல்லும் நேரத்தில் அவளை யாராலும் தொடக்கூட முடியாது.

இவள் யார்? எங்கிருந்து வந்தாள்? என்பது யாருக்கும் தெரியாது. இவள் பட்டாசு, வெடிச்சத்தம் கேட்டால் மட்டுமே பயந்து போய் புளியமரத்தின் வேர்களுக்குள் பதுங்கிக் கொண்டு அழுது கதறுகின்றாள். ஒரு அகதியாக தினமும் அவ்விடத்தில் வலம் வருகிறாள்.

<u>முடிவுரை:</u>

பெண்ணிய எழுத்தாளராகிய மாலதி மைத்திரியின் பெண்ணியப் பார்வையில் மனநிலை பாதிக்கப்பட்டு, அகதியாக வாழும் ஒரு பெண் அவலநிலைக்குத் தள்ளிவிட்டிருப்பதை நம் கண்முன்னே காட்சிப்படுத்தியுள்ளார்.

11. அகதி என்னும் கவிதையில் இடம்பெற்ற பெண்ணின் வாழ்க்கைப் பயணம் பற்றி எடுத்துரைக்க.

<u>முன்னுரை:</u>

அரசியல், போர் எனப் பல்வேறு காரணங்களால் ஊரைவிட்டோ, நாட்டை விட்டோ சென்று வேறு இடங்களுக்குப் புலம் பெயர்தல் அல்லது தஞ்சம் புகுவோரை அகதி என்று கூறுகிறோம். மேலும் இவர்களை ஆதரவற்றோர், நாடி வந்தவர்கள், அடைக்கலம் புகுந்தவர்கள் என்றும் கூறலாம்.

<u>அகதியாக வந்தப் பெண்:</u>

அவள் நெகிழிப் பைகளை தன் உடம்பை மறைக்கும் ஆடையாக அணிந்துள்ளாள். அவளது நடை யாருக்கும் அஞ்சாமல் செல்லும் கம்பீரமான தோற்றம் கொண்டது. அவள் நடந்து செல்லும் பாதை முழுவதும் நெகிழிப் பைகள் உரசிச்செல்லும். அதனால் சத்தம் எழுப்பியவாறே நடந்து செல்கிறாள். இதனையே,

“அவள் பாதை முழுவதும் பைகள் உரசும்
சப்தம் தொடர்ந்து கொண்டே இருக்க”

என்னும் வரிகள் சுட்டுகின்றன. அகதி என வந்தவள் தனது உடல் முழுவதும் நெகிழிப் பைகளை ஆடையாக அணிந்துள்ள தோற்றம் இவள் மனநிலையில் பாதிக்கப்பட்டவளாக இருப்பதை உணர்த்துகிறது.

<u>அகதியின் அவலம்:</u>

“யாரிடமும் அவள் கையேந்துவது இல்லை
எல்லாத் தழைகளையும் அப்படியே”

அவள் தன் உணவுக்காக யாரையும் நம்பி வாழவில்லை, யாரிடமும் கையேந்தியும் நிற்கவில்லை. அவள் கடக்கும் பாதைகளில் உள்ள எல்லாத் தழைகளையும், இலைகளையும் அப்படியே ஒடித்துக் தின்கிறாள். இதுவே அவளது தினசரி உணவாக உள்ளது.

<u>பெண்ணின் தோற்றம்:</u>

அவள் உடல் முழுவதும் நெகிழிகளைச் சுற்றிக்கொண்டு பார்ப்பதற்கு பூதம் போன்று காட்சியளிப்பாள். கூர்மையான பற்கள் வெளியே தெரிய அங்கே வருபவரையும் போவோரையும் பார்த்துச் சிரிப்பாள். யாரும் அவளை நெருங்கமுடுயாதபடி அவளுடைய தோற்றம் காணப்படுகிறது. இதுவே அவளது பலமாக உள்ளது.

<u>பெண்ணின் அச்சம்:</u>

அகதியென வந்து திரியும் அப்பெண் பட்டாசு வெடிக்கும் சத்தம் கேட்டாலே பயந்து போய் புளியமரத்தடியில் உள்ள வேர்களில் பதுங்கிக்கொண்டு அழுதுகொண்டே கதுறுவாள். இது அவளது பலவீனமாக இருந்தது. மேலும் அவளது இச்செயல் அவள் ஈழத்திலிருந்து வந்த அகதியாக இருப்பாள் என்பதை உறுதிப்படுத்துகின்றது. மேலும் குண்டுமழைகளில் அவள் தமது குடும்பத்தினரை இழந்திருப்பாள் என்னும் அவலம் அவளது அழுகையில் தெரியவருகிறது. இதுவே அவளது மனநிலை பாதிக்கப்பட்டதற்கு காரணமாக அமைந்திருக்கும்.

<u>முடிவுரை:</u>

கவிதாயிணி மாலதி மைத்ரி அவர்கள், ஒரு அகதியென அலைந்த பெண், அவளது மனநிலையில் பாதிக்கப்பட்டிருந்தால் அவளது நிலைமை எவ்வாறு இருக்கும்? அவளுக்கு யாரும் உதவ முன்வராத நிலை, கொடூரமான தோற்றம், பாவப்பட்ட ஜீவனாக அவள் வாழும் பரிதாபமான நிலை என அகதியாக வாழும் பெண்ணை நமது கண்முன் காட்சிப்படுத்தியிருக்கிறார்.

## அலகு - 2

**12. வாழ்க்கையும் வைராக்கியமும் என்ற உரைநடையிலுள்ள கருத்துக்களை ரா.பி.சேபிள்ளை கட்டுரை வழியாக விவரி.**

**முன்னுரை:**

**ரா.பி. சேதுப்பிள்ளை அவர்கள் தமிழுக்கு ஆற்றிய தொண்டு அளப்பரியது. பல புதிய முயற்சிகளை தம் உரைநடையிலே புகுத்தித் தமிழர்களின் தமிழ்த் தாகத்தை தனித்திருக்கிறார். 'வாழ்க்கை ஓர் அழகான பூந்தோட்டம். அத்தோட்டத்தில் வண்ணத்துப்பூச்சிகளைப் பிடிப்பதற்குப் பதிலாக பல பூக்களை கிள்ளி விடுகின்றோம்' என்ற கவிஞர் கல்யாண்ஜியின் கவிதை வரிகள் நினைவுக்கு வருகின்றது.**

**இவரது வாழ்க்கையும் வைராக்கியமும் என்ற இந்த உரைநடையில், பலரது வைராக்கியங்களைப்பற்றி அலசி ஆராய்ந்து பேசியுள்ளார் ரா.பி. சேதுப்பிள்ளை.**

**சட்டென்று நீர்த்துப் போகும் புராண, மயான வைராக்கியங்களையும், செத்தாலும் போகாது என்ற இயேசுநாதரின் வைராக்கியத்தையும் பற்றி ரா.பி. சேதுப்பிள்ளை அவர்கள் இக்கட்டுரையில் எங்ஙணம் விவரித்துள்ளார் என்பதைக் காண்போம்.**

**புராண வைராக்கியம்:**

**பன்னிரெண்டாம் நூற்றாண்டில் கம்பரால் இயற்றப்பட்ட புராண நூலான இராமயணத்தை வைத்து புராண வைராக்கியத்தை விளக்கியுள்ளார் பிள்ளை அவர்கள். அதில் கைகேயி இராமனை காட்டுக்குப் போகச் சொல்லிக் கட்டளையிடுகிறாள். இதனைக் கேட்ட இராமன் எவ்வித சலனமும் இன்றி காணப்படுகிறான். தான் ஆளஉள்ள நாட்டையும், செல்வத்தையும் அவனது உடன் பிறவாத உயிர் தம்பியாகிய பரதனுக்கே என்று மன்னன் தசரதன் ஆணையிட்டதாகக் கூறுகிறாள் கைகேயி, அதுகேட்ட இராமன் அகமலர்ந்து இருகை குவித்து பின்வருமாறு கூறினாள்.**

**“மன்னவன் தசரதனின் ஆணை அதுவென்றால், நான் மறுப்பேனா? மாதா, எனது சகோதரன் பெறுகின்ற செல்வமனைத்தும் நான் பெற்றதற்கு ஒப்பாகும்” என்கிறான்.**

**கைகேயிடமிருந்து விடைபெற்று புன்முறுவலோடு காட்டிற்குள் சென்றான் இராமன். அந்த நிகழ்வு குறித்து கம்பராமாயணத்தில் வரும் பாடலை படிப்பவருக்கும், அவன் தம்பிக்கும் நெடுங்காலமாக நிலத்தகராறுக் காரணமாக நீதிமன்றத்தில் வழக்கு நடக்கிறது என்று புராணத்தின் நிகழ்வை எதார்த்த வாழ்விற்கு சம்பந்தப்படுத்துகிறார். பெரும்பாலானவர்கள் வழக்கு வாதத்தில் சென்று, வென்றுவிட்டாலும் நெல் வயலை இழந்தவராகவே காணப்படுகிறார்கள் இன்று.**

**அந்த நிலையில் அந்த அண்ணன் இந்தக் கம்பனின் பாடலை படித்தவுடன் இராமனாக மானினான். பின்பு இரவு தூங்கி எழுந்தவுடன் பழைய பிடிவாத அண்ணனாக மாறி வழக்கறிசர் வீட்டு வாசலில் சென்று நிற்கிறான். இதுபோல சட்டென நீர்த்துப் போகச் செய்யும் செயல் புராணத்திற்கு மட்டுமே பொருந்தும். இவ்வித வைராக்கியங்களை புராண வைராக்கியம் என்கிறார் ரா.பி. சேதுப்பிள்ளை அவர்கள்.**

**மயான வைராக்கியம்:**

**ஒருவன் திடீரென்று இறந்து விடுகிறான். அவனைக் காண உற்றார் உறவினர் எல்லோரும் வருகின்றனர். கவலையுறுகின்றனர். கண்ணீர் சிந்துகின்றனர். நெருப்பை மூட்டுகின்றனர். அப்பொழுது ஒருவன் நினைக்கிறான் என்னடா உலகம் இது. என்ன மனித வாழ்க்கை இது, நேற்றைய தினம் நலமாக உயிருடன் இருந்தான், இன்று எவ்விடம்**

சென்றான் தெரியவில்லையே. இப்படி இறந்துபட்டு போய்விட்டானே, நிலையற்ற வாழ்க்கை என நினைத்து வருந்தி,

*“கனியேனும் வறிய செங் காயேனும்*
*உதிர்சருகு கந்தமூ லங்களேனும்*
*கனல் - வாதை வந்தெய்தின் அள்ளிப்பு......”*

என்று இறைவனை நினைத்துப் பாடுகிறான். மயானத்திலிருந்து வீடு திரும்புகிறான். மனதில் அதுவரை எண்ணிய எண்ணங்கள், மனதில் இருந்த வைராக்கியம் மாயமாய் மறைந்து போகிறது. இதுதான் மயான வைராக்கியம்.

<u>அரிச்சந்திரன் வாய்மை:</u>

மனத்தின் திண்மை இல்லாதவர்கள் தான், தான் கொண்ட கொள்கையில் நிலைத்து நிற்கமாட்டார்கள். மன உறுதியுடையவர்கள் மலை போல் குலையாது நிற்பார்கள். அரிச்சந்திரன் வாய்மை என்ற சத்திய நெறியில் வழுவாது நின்றான்.
பலவகையான சோதனைக்கு ஆளானான். தன் மனைவியை இழந்தான். மகனை இழந்தான். தான் பெற்ற செல்வங்கள் அனைத்தையும் இழந்தான். ஆனால் அவன் சொன்ன சொல் தவறவில்லை.

இந்நிலையில் முனிவர் கௌசிகர்(விசுவாமித்திரர்) அவனிடம் வந்து அவன் இழந்த அனைத்தையும் தன்னால் தர முடியும் எனக் கூறுகிறார். ஆனால் அவனது அரசை தன்னிடம் கொடுத்ததாக ஒரேயொரு பொய் சொல்ல வேண்டும் என்கிறார். அதற்கு பதில்கூறும் விதமாக அரிச்சந்திரன் இந்தப் பாடல் வரிகளை கூறுகின்றான்.

*“பதிஇ ழந்தனம் பாலனை இழந்தனம் படைத்த*
*நிதி இழந்தனம், இனிநமக் குளதென நினைக்கும்*
*கதி யிழக்கினும் கட்டுரை இழக்கிலேன்”*

இவ்வாறு முனிவரிடம் கூறுகின்றான். அதைக் கேட்ட முனிவர்,

*“மதி இழந்து தன் வாயிழந்து அருந்தவன் மறைந்தான்”*

அமைதி இழந்து, சொல் வார்த்தையில்லாமல் மானம் இழந்து சென்றார் கௌசிக முனிவர்.

<u>இயேசுநாதரின் பொறுமை:</u>

மனித குணங்களில் மிகவும் இன்றியமையாதது பொறுமை, பொறுமையைப் பற்றி வள்ளுவர் கூறுவது,

*“பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை*
*மறத்தல் அதனினும் நன்று”*

வரம்பு கடந்து பிறர் செய்யும் தீங்கைப் பொறுத்து கொள்ளல் வேண்டும். மேலும் அத்தீங்கை நினைவில் வைத்துக் கொள்ளாமல் மறந்திடலும் வேண்டும் என்கிறார் வள்ளுவ பெருந்தகை. “பொறுத்தார் பூமி ஆள்வார்” என்பார் ஆன்றோர்கள். இங்ஙனம் பொறுமை மனித வாழ்க்கைக்கு மிக இன்றியமையாதது.

மேற்கண்ட குறளுக்கும், பழமொழிக்கும் பொருந்தும் வகையில் இயேசுநாதர் தமக்கு தீங்கு செய்தோரையும் மன்னித்து, பரலோகத்தில் இருக்கும் எங்கள் ‘பரமபிதாவே’ இவர்கள் இன்னது என்று அறியாது செய்கிறார்கள். இவர்களை மன்னிப்பாயாக என

வேண்டுகிறார். யூதர்கள் செய்த தீங்கினை பொறுத்துக்கொண்டார். அதனால் பரலோக ராஜ்ஜியம் கிட்டியது இயேசுநாதருக்கு. இங்ஙனம் ரா.பி. சேதுப்பிள்ளை அவர்கள் கிறித்துவக் கம்பர் (கிருஷ்ணப்பிள்ளை) பாடலை மேற்கோள் காட்டுகிறார். இயேசு தமக்கு தீமை செய்தோருக்கும் நன்மையே செய்துள்ளார்.

முடிவுரை:

ஒருவனின் வைராக்கியம் என்பது அவனது மனதில் ஆலமர வேர்போல விரிந்தும் படர்ந்தும் உறுதியாக இருக்க வேண்டும். அதுவே சிறப்பாகும். முருங்கை வேர்போல நிலத்தில் பிடிப்பற்று இருக்கக்கூடாது. இங்கு இயேசுநாதரின் வைராக்கியம், அரிச்சந்திரனின் வைராக்கியம் முதலான வைராக்கியங்கள் ஆலமர வேருக்கு ஒப்பாகும். வைராக்கியமற்றவர்கள் முருங்கை மரத்திற்கு ஒப்பாவர்.

தாம் கொண்ட கொள்கையில் பிடிப்பும் பிடிவாதமும் கொண்டவர்கள் வாழ்வில் என்றும் நிலைத்து நிற்பர். அவர்களின் நற்செயல்களால் அவர்களது பூத உடம்பு அழிந்தாலும் புகழுடம்பு அழியாது காக்கப்படும் என்பதே இக்கட்டுரையின் வாயிலாக நாம் அறிந்து கொள்ளும் கருத்தாகும்.

13. இராவணன் சூரன் வைராக்கியத்தையும், மத, சமுதாய வைராக்கியத்தையும் பற்றி சேதுப்பிள்ளை கூறுவன யாவை?

முன்னுரை:

அரிச்சந்திரனும், ஏசுநாதரும் அறநெறியிலே வைராக்கியம் பூண்டவர்கள். இதற்கு மாறாக புகழ்மீது ஆசைகொண்டு இவ்வுலக வாழ்வை துறக்கிறார்கள் இராவணனும், சூரனும். இவர்களிருவரும் உயிர் போனாலென்ன தங்களின் வைராக்கியத்தை இந்த உலகம் புகழும் என நினைத்தார்கள். கடவுளை காணாது இவ்வுயிர் மாளாது என ஆண்டாளும், திருநாவுக்கரசரும் மத வைராக்கியம் கொண்டிருந்தார்கள். இறுதியாக, தடைகள் எதுவாயினும் தகர்த்தெறிந்து சமூகத்தை சீர்திருத்தப் போராடும் சமூகநீதி காப்போரின் உயரிய வைராக்கியத்தையும் சொல்கிறார் ரா.பி. சேதுப்பிள்ளை.

இராவணனின் வைராக்கியம்:

கற்பின் செல்வியாகிய சீதையைக் கவர்ந்து சென்று சிறை வைத்தான் இராவணன். அனுமன் மற்றும் வாரனங்களின் உதவியுடன் சீதையை மீட்க இலங்கைக்குப் படையெடுத்தான் இராமன். இராவணனுக்கும் இராமனுக்கும் இலங்கையில் போர் மூண்டது.

இராவணனின் மகன் இந்திரசித்தன் இலங்கையின் நிகரற்ற வீரன். ஆகையால் அவன் வென்று வருவான் என்று காத்திருந்தான் இராவணன். ஆனால் இந்திரசித்தனோ, தன் அனைத்துப் படைகளை அனுப்பியும் இராமனை தோற்கடிக்க அவனால் முடியவில்லை. அவன் தன்னால் முடிந்த எல்லாவற்றையும் முயற்சித்துவிட்டதாகவும், இனி சீதையை இராமனிடம் ஒப்படைப்பதைத் தவிர வேறு வழியில்லை எனவும் கூறுகிறான். அப்படி செய்யவில்லை என்றால் இலங்கை பாழாகும். அப்படிச் செய்தால் இலங்கையை விட்டு இராமனும் அவனது படையும் போய்விடும்.

நாட்டைவிட்டு பகையும் போரும் நீங்கும் என இந்திரசித்தன் இராவணனை கெஞ்சிக் கேட்கிறான். ஆனால் இராவணன் சினம்கொண்டு எதிரே நின்ற இந்திரசித்தனைப் பார்த்து பேதை என்கிறான். மேலும், தான் என்ற இறுமாப்புடன் இருக்கிறான் இராவணன். போர் புரிய முடிவெடுத்தது இந்திரசித்தனை நம்பி இல்லை. தன்னுடைய பலத்தை நம்பித்தான்

என்கிறான். வீரப்புகழே வாழ்வினும் விரும்பத்தக்கது என்று சொல்லி, தான் இராமனால் அழிந்தாலும் பரவாயில்லை, தனக்கு இவ்வுலகில் புகழ் கிட்டும் எனக்கூறி போர்செய்து முடிவில் உயிர் துறந்தான் இராவணன். ஆணவம் தலைக்கேறினால் அழிவது உறுதி என்பது இங்கு இராவணனின் முடிவில் உணரப்படுகிறது.

**சூரணின் வைராக்கியம்:**

சூரன் அசுர குலத்தின் பேரரசன். வீரமகேந்திரம் என்னும் நகரில் அரசு வீற்றிருந்தான். வானவர் நாட்டின்மீது படையெடுத்து இந்திரன் மகனாகிய சந்தனையும் தேவரையும் பிடித்துச் சிறை வைத்தான். அவர்கள் இருவரையும் விடுவிப்பதற்காக முருகன் படையெடுத்து வீரமகேந்திரம் விரைந்தான். சூரனின் மகன் பானுகோபன் முருகனின் வீரசேனையை எதிர்த்து நின்றான். வீரவேல் கொண்டு போர்புரியும் முருகனின் படைக்கு முன்னால் தான் ஒன்றுமில்லை என உணர்ந்தான் சூரன்.

முருகனை ஒரு நாளும் வெல்ல இயலாது என்று நன்கு உணர்ந்தான். இறுதியாக, சூரனிடம் இருப்பதிலேயே சிறந்த படையான மாயப்படையே மாயமாய் போனது. தன் தந்தை சூரனிடம் முறையிட்டான். பானுகோபன் தன் தந்தைமீது வைத்திருந்த மிகுந்த அன்பினால் அவரை சிறையிலிருக்கும் வானவரை விட்டுவிடும்படி கேட்டுக் கொண்டான். இல்லையேல் முருகன் தன் தந்தையாகிய சூரனை அழிக்க நேரிடும் என அஞ்சினான். ஆனால், சூரனோ வானவரை விட்டுவிட்டால் தன் மதிப்பிற்கு குற்றம் விழைந்துவிடுமென கருதி, உயிர் போகும்வரையில் அவர்களை விடமாட்டேன் என்று உறுதியாய் இருந்தான். இறுதியில், முருகன் சூரனை வதம் செய்து வானவரை விடுவித்தான்.

**மத வைராக்கியம்:**

"கொள்ளேன் புரந்தரன் மால் அயன் - வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நிதனடி யாரொடல் லால்நர - கம்புகினும்
என்ளேன் திருவரு ளாலேஇ ருக்கப் - பெறின் இறைவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னையல் லால் - எங்கள் உத்தமனே".

என்ற திருவாசகப் பாடலின் பொருள் : எங்கள் மேலோனே! தலைவனே! உன் திருவருளோடு கூடி இருக்கப் பெறுவேனாயின், இந்திரன், திருமால், பிரமன் ஆகிய இவர்களுடைய வாழ்வினைப் பொருளாக ஏற்க மாட்டேன். எனது குடி அழிந்தாலும் உன் அடியாரோடன்றிப் பிறரோடு நட்புக் கொள்ள மாட்டேன். நரகத்திற் புகுந்தாலும் அதனை இகழமாட்டேன். உன்னை அன்றி வேறு தெய்வங்களை மனத்தாலும் நினைக்க மாட்டேன். இவ்வுலக வாழ்க்கையில் ஆசையிழந்து கடவுளையே நினைத்து கசிந்து நிற்கும் நிலையே மத வைராக்கியம். இந்தப் பாடலில் கூறுவதுபோன்ற வைராக்கியத்தைத் தம் வாழ்க்கையிலே காட்டிய பக்தர் பலராவர். ஸ்ரீ வில்லிபுத்தூரில் கோதை என்னும் ஆண்டாள் தோன்றினாள். சிறு வயிதிலேயே அவள் பெருமாளிடம் பேரன்பு செலுத்தினாள். அவர் திருப்புகழைப் பாடிப் பாடிப் பரவசமுற்றாள். ஆண்டாள் பருவமுற்றபோது பெற்றோர் அவளுக்கு மணம் முடித்து வைக்க ஆசைப்பட்டனர். இதையறிந்த ஆண்டாள் "மனிதனாகப் பிறந்த யாரையும் நான் மணக்கமாட்டேன். மானிடருக்கு வாழ்க்கை படேன்" என்றாள். "மணிவண்ணனாகிய பெருமாளையே மணப்பேன்" என்றாள். இந்த மனத்தின்மையைக் கண்டு யாவரும் வியப்பும் திகைப்பும் உற்றார்கள்.

அவள் பெருமாளை காண்பதற்காக தொடர்ந்து அவரையே அனுதினமும் நினைத்து உயிர் உருக பாடி வந்தாள். பூசை புனஸ்காரங்களை செவ்வனே செய்து வந்தாள். அவளின் மனத்தின்மையை அறிந்த திருவரங்கப் பெருமாள் அவளை ஏற்றுப் பேரருள் இன்பமளித்தார் என்று குருபரம்பரை என்னும் வரலாற்று நூல் கூறுகிறது என்று சேதுப்பிள்ளை குறிப்பிடுகிறார்.

திருநாவுக்கரசரின் வைராக்கியம்:

அறுபத்துமூன்று நாயன்மார்களில் அப்பர் திருநாவுக்கரசர் நாயனார் மிகவும் சிறப்பு வாய்ந்தவர். இவர் கி.பி. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த சைவத் தமிழ்க் கவிஞர். தமிழ்நாட்டிலுள்ள சிவஸ்தலங்கள் எல்லாம் சென்று சிவனைப் போற்றிப் பாடி வணங்கி வந்தார். கைலாய மலையில் சிவபெருமான் வீற்றிருக்கும் கோலத்தைக் காண ஆசைப்பட்டார். எழுபது வயதிற்கு மேற்பட்ட முதுமைப் பருவத்தில் வடதிசையை நோக்கி நடந்தார். காசியை அடைந்த நாவுக்கரசர் அங்குள்ள விசுவாதரை கைத்தொழுதார். இரவு பகலாக உணவு உறக்கமின்றி நடந்து நடந்து, கால் இரண்டும் தேய்ந்தது: கால்கள் வலுவிழந்தால் என்ன இரு கைகள் இருக்கிறது என கைகளால் நடக்கத் துவங்கினார். கைகளும் தேய்ந்தது. நகர்ந்து செல்ல முடியாமல் வழியிலேயே தங்கினார். அப்போது அவ்வழியாக முனிவர் ஒருவர் வந்தார். திருநாவுக்கரசரின் விடாமுயற்சியையும் வைராக்கியத்தையும் கண்டு பிரம்மித்தார். சிவபெருமானைக் காண அவர் படும்பாட்டைக் கண்டு அவர்மேல் இரக்கம் கொண்டார்.

முனிவர், திருநாவுக்கரசரின் நோக்கம் இன்னதென அறிந்த போதிலும் அவர் எதற்காக வந்தார் எனக் கேட்டார். அதற்கு திருநாவுக்கரசர், "முனிவரே! நான் கைலாச நாதனைக் கண்டு கும்பிடும் காதலால் வந்தேன்" என்று மறுமொழி தந்தார். அதுகேட்ட முனிவர், வானவரும் காண முடியாத அந்த மலையை மனிதனாகிய நாவுக்கரசர் காண முடியாது என்றார். முனிவரின் பதிலால் திருநாவுக்கரசர் சிறிதும் மனம் தளரவில்லை. அவர் தம் மன உறுதியை முனிவருக்குத் திடமாக எடுத்துரைத்தார்.

"ஆளும் நாயகன் கயிலையில் இருக்கக்கண்டலல்லால்
மாளும் இவ்வுடல் கொண்டுமீ ளேன்" என மறுத்தார்.

முனிவர் வேடத்தில் வந்திருந்த சிவபெருமான் திருநாவுக்கரசரின் மனுஉறுதியையும் இறை பக்தியையும் பார்த்து மகிழ்ந்து, அவருக்கு கைலாசக் கோலத்தைக் காட்டியருளினார் என்று பெரியபுராணம் கூறுகிறது.

சமுதாய வைராக்கியம்:

மத வைராக்கியம் போலவே மனிதனுக்காக தொண்டு செய்ய வேண்டும் என்று வைக்கப்படும் வைராக்கியமும் பெரியது என்கின்றார் சேதுப்பிள்ளை. ஆனால் அப்படி சொல்லும்போது அவர் பொதுவாக சமூக மாற்றத்திற்காகப் போராடுபவர்கள் என்று கூறிவிட்டார்.

முடிவுரை:

"எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
தண்ணியராகப் பெறின்"

என்ற திருக்குறளுக்கு எடுத்துக்காட்டாக வாய்ந்தவர்கள்தாம் இந்த சமூகநீதி காத்தவர்கள். மக்களுக்காக தங்கள் வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணித்தார்கள். இத்தகைய மனஉறுதி பெற்று இந்திய நாட்டுக்காகவும் நாட்டு மக்களுக்காகவும்

உழைக்கும் மனிதர்கள் மற்ற எல்லா வைராக்கியம் படைத்தவர்களைவிடவும் உயர்ந்தவர்கள் என ரா.பி. சேதுப்பிள்ளை கூறுகின்றார்.

14. பழங்காலத்து அணிகலன்கள் கட்டுரையில் வேங்கடசாமி கூறும் அணிகலன்களையும் அதன் சிறப்புகளையுப் பற்றியும் குறிப்பு வரைக.

முன்னுரை:

வேங்கடசாமி சென்னையில் மயிலாப்பூரில் பிறந்து தனது அண்ணன் கோவிந்தராஜனிடம் தமிழ் பயின்று, பின்னர் நீதிக்கட்சி நடத்திய பிறகு, அவர் திராவிட இதழில் பணிக்கு சேர்ந்தார். தமிழகம் எங்கும் உள்ள வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்களுக்குச் சென்று ஆய்வு செய்தார். தொல்லியல், கல்வெட்டியல், நாணயவியல் ஆகிய துறைகளில் அரிய களப் பணியாற்றினார். அவர் காலத்தில் வரலாற்று ஆசிரியர்களால் அதிகம் கவனம் பெறாத சமண பௌத்த கோவில்களையும் ஆய்வு செய்தார். இந்த உரைநடையில் பண்டைய தமிழர்கள் அணிந்த அணிகலன்கள் எண்ணென்ன அவற்றின் சிறப்பு யாது என்பது பற்றி விவரித்து எழுதியுள்ளார். இக்கட்டுரையில் அவர் கூறியது அணிகலன்களின் சிறப்பினையும் அதனை யார் யார் பயன்படுத்தினர் என்பது பற்றியும் காண்போம்.

பண்டைய தமிழர்களின் உடை கலாச்சாரம்:

அணிகலன்களை வெறும் நகையாக மட்டும் பயன்படுத்தாமல் அவற்றை உடலை மறைக்குமளவிற்கு அதிகமாக அணிந்து ஆடையாகவும் பயன்படுத்தியுள்ளனர் பண்டைய தமிழர்கள். ஆண்களும் அதிகமாக நகைகளை அணிந்தார்கள். அவர்கள் தங்கள் மேலுடம்பை வெற்றுடம்பாக வைத்து கீழ் உடம்பை மட்டும் ஆடைகொண்டு மறைத்தனர். இந்த நவீன காலத்தில் ஜிப்பா, கமிசு, சட்டை முதலிய ஆடைகளை அணிந்து உடலை மறைக்கின்றார்கள். அதேபோல பெண்களும் மேலாடை அணிந்ததில்லை. அக்காலத்தில் செல்வந்தரும், பிரபுக்களும்கூட மேல்சட்டை அணியாமல்தான் இருப்பார்கள். அவர்கள் சட்டை அணிவதை அநாகரிகமாகக் கருதினார்கள். ஆனால், இன்று நாகரிகத்தின் பார்வை மாறியுள்ளது. மேலும் அக்காலத்தில் அரசர்களிடம் ஊழியம் செய்த கஞ்சுகர்கள் மட்டுமே சட்டை அணிந்தனர். அதற்குச் சான்றாக மணிமேகலையில் காதை 25 மற்றும் 28 லும் சிலப்பதிகாரத்தில், நடுகாற் காதையில் அடி 80 லும் வரும் வரிகளைக் கூறலாம்.

*“வையங் காவலன் தன்பாற் சென்று*
*கைதொழு திறைஞ்சிக் கஞ்சுகன் - உரைப்பேன்”* - (மணிமேகலை, காதை 28)
*“நீலன் முதலிய கஞ்சுக மாக்கள்”* - (சிலப்பதிகாரம், நடுகாற் காதை - அடி 80)

மேலும், தஞ்சை பெரிய கோவிலில் இதற்காக சாட்சியங்கள் காணப்படுகின்றன. அங்கு அரசன் முதல் ஆண்டி வரையில், ஆண் பெண் உருவங்கள் காணப்படுகின்றன. அவற்றில் கஞ்சுகர் உருவத்தை தவிர்த்து மற்ற எல்லா உருவங்களும் மேல்சட்டை அணியாமலிருப்பதை நம்மால் காணமுடிகிறது. இந்த ஓவியங்களும் சிற்பங்களும் அக்காலத்து மக்கள் ஆடையணிந்த முறையை நமக்கு நன்றாகத் தெரிவிக்கின்றன.

மேலாடை:

ஐரோப்பியரும், மொகலாயர்களும் நமது நாட்டிற்கு வந்த பிறகுதான் மேலாடை உடுத்தும் கலாச்சாரம் நமது பெண்களிடம் வந்தது. பெண்கள் மேலாடை அணியத் தொடங்கிய காலத்தில், உயர்சாதிப் பெண்கள் மட்டுமே மேலாடை அணியவேண்டும் என்றும், கீழ்சாதிப் பெண்கள் அணியக்கூடாது என்றும் தடைபோட்டனர். இதன்

காரணமாக கேரளத்திலும் 'மார்ச்சீலைக் கலகம்' என்ற கலகமும் சண்டை சச்சரவுகளும் அக்காலத்தில் நடந்ததாக வரலாறு கூறுகின்றது.

பண்டைய காலத்தில் ஆண்களும் பெண்களும் நமது நாட்டில் மேலாடை அணியாமல் இருந்த காரணத்தினால், அவர்கள் உடம்பு முழுவதும் பலவிதமான நகைகளை அணிந்தார்கள். குறிப்பாக, நம் நாட்டுப் பெண்கள் தலைமுதல் கால்வரை நகைகளை அணிந்து 'பொன் காய்த்த மரம்' போல தோன்றினார்கள். வெற்றுடம்பாக இருந்ததால் நகை அதிகமாக அணிந்தார்கள் என்பது ஒரு காரணம். மற்றொரு காரணம், அக்காலத்தில் நகைகளை பாதுகாப்பாக வைப்பதறகு வங்கிகள் போன்ற சேமிப்பு நிலையங்கள் இல்லாததால், தாங்கள் ஈட்டிய பொருள்களை பொன்னாலும், வெள்ளியாலும், முத்து, மாணிக்கம் போன்ற நவரத்தினங்களாலும் நகைகளைச் செய்து உடம்பிலே அழகாக அணிந்து கொண்டார்கள். இவ்வாறு அணிவதை அவர்கள் நம்பிக்கையான சேமிப்பு என எண்ணினார்கள்.

<u>வளையல்:</u>

நகைகளைப் பற்றி வேங்கடசாமி கூறத் தொடங்கும்போது, முதல் நகையாக பெண்கள் விரும்பி அணியும் வலையலை கூறுகிறார். பணைடைக் காலத்தைப் போலவே இக்காலத்திலும் கைகளில் வளையல்கள் அணிகிறார்கள். இக்காலப் பெண்கள் பொன் காப்பு, கண்ணாடி வளைகள் அணிகிறார்கள். கண்ணாடி வளையல்கள் அணிவது

முகமதியர்கள் இந்தியாவிற்கு வந்த பிறகு தான் என்கிறார் வேங்கடசாமி. ஆனால், பண்டைய காலத்தில் பெண்மணிகளை கைகளில் சங்கு வளைகளை அணிந்தார்கள். வளை என்றால் சங்கு என்று பொருள். சங்கை வட்ட வடிவில் அறுத்து செய்யப்பட்ட சங்கு வளைகளைப் பண்டைக் காலத்துப் பெண்மணிகளை அணிந்தனர்.

இந்தியா முழுவதிலும் இந்தக் கலாச்சாரம் இருந்ததாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுகிறார்கள். ஏழை மக்கள் சாதாரண இடம்புரி சங்கு வளைகளை அணிந்து கொண்டார்கள். வசதி படைத்தவர்கள் பூ வேலைகளைக் கொண்ட வளைகளை அணிந்தனர். பிரபுக்களின் குடும்பப் பெண்களும் அரச குடும்பத்துப் பெண்களும் வலம்புரிச் சங்கு வளையல்களை அணிந்தார்கள். இடம்புரிச் சங்கு வளைகள் சற்று விலை மலிவானவை. வலம்புரிச் சங்கு வளைகள் விலை உயர்ந்தது. பாண்டிய மன்னனின் அரசி தனது கைககளில் பொன் வளையல் மற்றும் வலம்புரி வலையல் அணிந்திருந்தாள் என்பதை நெடுநல்வாடையில் வரும் இந்தப் பாடல் நமக்கு உண்ர்த்துகிறது.

*"பொலந்தொடி நின்ற மயிர்வார் முன்கை*
*வலம்புரி வளையோடு கடிகைநூல் யாத்து"* - (அடி 141-142)

கைம்பெண்கள் நமது வளையல்களை உடைத்துக் கொள்ளும் வழக்கம் அக்காலத்திலும் இருந்தது என்பதை சிலப்பதிகாரத்தில் கோவலனை இழந்த கண்ணகி தனது கணவன் இறந்த செய்தி கேட்டு அவள் அணிந்திருந்த சங்கு வளையல்களை உடைத்ததைக் கொண்டு காணமுடியும். சங்கு வளைகள் அணியும் வழக்கம் இக்காலத்து பெண்களிடையே மறைந்து போனாலும் பொன் வளையல் மற்றும் கண்ணாடி வளையல்களை அணியும் வழக்கம் இன்றும் நமது பெண்மணிகளிடம் இருந்துதான் வருகின்றது.

காதணி:

காதிற்கு அழகு சேர்க்கும் அழகிய ஆபரணமாகப் பார்க்கப்படும் அணிகலன்தான் காதணி. காது துளையிடுவது என்பது இந்தியர்களிடையே ஆண் பெண் பேதமின்றி இருபாலருக்கும் சிறுவயதிலேயே பெற்றோர்கள் ஓர் சடங்காக நடத்துவர். இன்றும் அதனை காதணி விழா என்னும் பெயரில் கொண்டாடி வருகின்றனர்.

பண்டைய தமிழ் நாகரிகத்தில் பாம்படம் என்னும் ஒரு வகை காதணி அணியும் வழக்கம் இருந்தது. காதைக் குத்தி துளையிட்டு அத்துளையை கடிப்பு என்னும் கனமான தங்கக் கட்டியினால் பெரிதாக்கி, அத்துளையை பெரியத் துளையாக வளரச் செய்து, அந்த நீண்ட காதுத் துளையில் தோடு தொங்கும். இதனை தெய்வத்தன்மை பொருந்தியதாகக் கருதி மிகவும் கடுமையாக விரதமிருந்து காதின் துளையை மிகக் கவனமாக பெரிதாக்க முயற்சியெடுப்பர் அக்கால பெண்கள். பாம்பு படமெடுப்பதைப் போன்ற வடிவத்தில் இது இருப்பதால் இதற்கு பாம்படம் என்று பெயர் பெற்றது. இதற்கு 'தண்டட்டி' என்ற மற்றுமொரு பெயரும் உண்டு. இது தவிர ஓலை என்னும் அணியையும் காதில் தமிழர்கள் அணிந்துள்ளனர். அதனை 'காதோலை' என்பார்கள்.

பெண்களின் தலையை அலங்கரிக்கும் நகைகள்:

சீதேவியார், வலம்புரி, தென்பல்லி மற்றும் வடபல்லி ஆகியன பெண்களின் தலையில் அணியும் நகைகள் ஆகும். சீதேவியார் என்பது சூளாமணி. இதற்கு ரத்தினச்சுட்டி மற்றும் ஜடைப்பில்லை என இரண்டு பெயர்கள் உள்ளன. தென்பல்லி, வடபல்லி என்னும் இவைகள் தலையின் இடப்பக்கம் வலப்பக்கம் அணியப்படும் நகைகள். இவை பல்லியின் உருவத்தை ஒத்திருப்பதால் அப்பெயர் பெற்றன. தொய்யகம், வாகுச்சுட்டி என்னும் நகைகள் நவரத்தினங்களால் செய்யப்பட்டவை. இவை தலையின் நடுவில் கூந்தலில் அணியப்பட்டன.

மூக்குத்தி:

பெண்களுக்கு முகத்தில் அழகு சேர்க்கும் ஆபரணங்களில் மூக்குத்தியும் ஒன்று. புல்லாக்கு மற்றும் மூக்குத்தி அணியும் வழக்கம் தெற்கு இந்தியர்களுக்குக் கிடையாது. இந்த வழக்கம் பிற்காலத்தில் வடநாட்டிலிருந்து இங்கு வந்திருக்க வேண்டும் என்று வேங்கடசாமி கூறுகிறார்.

சங்கிலி மற்றும் மேகலை:

வீரச்சங்கிலி என்பது சங்கிலிப்போலப் பென்னால் செய்யப்பட்டது. இதற்கு சரடு அல்லது ஞான் என்றும் பெயர்கள் உண்டு. பொன்னர் மாலை என்பது பொன்னாலும் இரத்தினங்களாலும் செய்யப்பட்ட அழகான ஆபரணம். முத்துமாலை, பவளமாலைகளும் கழுத்துக்கு ஆபரணங்களாக அணியப்பட்டன. காசுமாலை என்பது பிற்காலத்தில் உண்டானது. இது பொற்காசுகளையும் பவுன்களையும் சேர்த்து உருவாக்கப்பட்டது.

மேகலை:

முப்பத்து இரண்டு முத்து வடங்களால் ஆன அணிகலன்தான் மேகலை, இதை 'ஒட்டியானம்' என்றும் கூறுவார்கள். இது தங்கத்தாலும் வெள்ளியாலும் பட்டையாக செய்து அரையில் ஆடைக்கு மேலே அணியக்கூடிய ஆபரணமாகும்.

*"பிறங்கிய முத்தரை முப்பத் திருசரத்*
*திற்றிகழ் பூந்துகில் நீரமையின் உடீஇ"* - (சிலப்பதிகாரம், கடலாடு காதை).

சிலம்பும் மோதிரமும்:

காலுக்கு அழகு சேர்க்கும் அணிகலனான சிலம்பு மிகவும் சிறப்பு வாய்ந்த அணிகலனாகக் கருதப்படுகிறது. அதன் உள்ளே பரற்கற்கள் இடப்பட்டிருப்பதால், காலில் அணிந்து நடக்கும்போது ஓசை உண்டாகும். இது சாதாரணமாக வெள்ளியினால் செய்யப்படும் அணிகலன். செல்வந்தர்களும் அரசர்களும் இதை பொன்னால் செய்வார்கள். பாண்டிமா தேவியின் காற்சிலம்பின் பரற்கற்கள், முத்துக்கள், கண்ணகியின் சிலம்பின் பரற்கற்கள் மாணிக்கக் கற்கள் என்று சிலப்பதிகாரம் (மதுரை காண்டத்தில்) கூறுகிறது.

மேலும் இரண்டு ஆபரணங்கள் உண்டு, அவை கடகம் மற்றும் குரங்குசெறி. கடகம் என்பது மேல்கையில் அணிவது. இது மாணிக்கம் முதலிய கற்கள் பதித்து பொன்னால் செய்யப்படுகிறது. குரங்குசெறி என்பது பெண்கள் தங்கள் காலுக்கு மேலே தொடையில் அணியும் அணிகலன். ஆனால் அவ்வழக்கம் இக்காலத்தில் இல்லை.

தமிழர்கள் கைவிரலுக்கும் கால்விரலுக்கும் மோதிரம் அணிவது வழக்கமாக இருந்தது. சுண்டுவிரலுக்கு அடுத்த விரலில் அணியப்படும் மோதிரத்திற்கு 'பகுவாய் மோதிரம்' எனப் பெயர். மகரவீன் வாய்திறந்து அங்காத்திருப்பதுபோல செய்யப்பட்டிருக்கும். இதற்கு நெறி என்னும் பெயர் உண்டு. 'ஏனாதி மோதிரம்' என்னும் ஒருவகை மோதிரம் பண்டைக் காலத்தில் இருந்தது. ஏனாதி மோதிரத்தை எல்லோரும் அணிய முடியாது. சேனைத் தலைவர்களில் ஏனாதி என்ற பட்டம் பெற்றவர்கள் மட்டும்தான் அணிய முடியும்.

முடிவுரை:

நம்மைச் சுற்றி நிறைய வரலாற்றுச் சிறப்புமிக்க பொக்கிஷங்கள் நம் கண்களுக்கு தெரிந்தும் கூர்ந்து கவனிக்கப்படாமல் இருக்கின்றன. இந்த உரைநடையின் முடிவில் வேங்கடசாமி தமது வாசகர்களின் கலைக்கூடங்களாக விளங்கக்கூடிய நமது கோவில்களை கூர்ந்து கவனிக்க வேண்டுகிறார். சைவ மற்றும் வைணவக் கோவில்களிலே பலவகையான தெய்வ உருவங்களும் மனித உருவங்களும் கல்லிலும் செம்பிலும் செய்து வைக்கப்பட்டுள்ளன. பார்க்காமலிருப்பது வருத்தத்திற்குரியது என வேங்கடசாமி குறிப்பிடுகின்றார். கலை கலைக்காகவே என்ற எண்ணத்தோடு அல்லாமல், கலை நம் வாழ்விற்கு எங்ஙனம் வலுச்சேர்க்கிறது என்பதை உணர்ந்து செயல்படவேண்டும். ஆயல்கலைகள் அறுபத்து நான்கு. அதில் அணிதல் என்பது அழகுக்கலை. 'அணிவோம் அழகுற, அடைவோம் உண்மை ஆனந்தம்' என்பதை இக்கட்டுரை வாயிலாக வேங்கடசாமி அவர்கள் நமக்கு அருமையாக எடுத்துரைக்கின்றார்.

## அலகு - 3

15. பேறிஞர் அண்ணாவின் "நாட்டில் நடப்பது" எனும் நாடகம் உணர்த்தும் சமூக நீதியினை எடுத்துரைக்க.

முன்னுரை:

அறிஞர் அண்ணா அவர்கள் மிக சிறந்த தமிழ் சொற்பொழிவாளர், எழுத்தாளர், அரசியல்வாதி, தமிழில் சிலேடையாக, அடுக்கு மொழிகளுடன் அனைவரும் வியக்கமுபடி கவர்கின்ற குரலில் வளமுடன் பேசக்கூடியவர்.

புதினம், சிறுகதை, நாடகம், திரைக்கதை என அனைத்துத் துறையிலும் தன் முத்திரையைப் பதித்தவர். நாடகங்கள் வாயிலாகப் பல மாற்றங்களையும்

கொண்டுவந்தவர். நடிப்பதற்காக மட்டுமல்லாமல் படிப்பதற்காகவும் நாடகங்களை எழுதியவர் அறிஞர் அண்ணா.

பொழுதுபோக்கிற்காக மட்டுமல்ல நாடகங்கள், சமூகத்தில் புதுப்புது வளமான புரட்சிகளையும் ஏற்படுத்தும் என்கிற நோக்கில் தனது முதல் நாடகப் பயணத்தைத் தொடங்கினார்.

சமூகத்தைச் சீரழிக்கும், புரையோடிப் போயிருக்கும் சாதியம், பெண்ணடிமைத்தனம், மூடநம்பிக்கை, ஒற்றுமை இல்லாமை, மதவெறி போன்றவற்றை அகற்றி முற்போக்கு குணாம்சம் கொண்டதாக மாற்றுவது சமூக சீர்திருத்தம்.

“பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்” என்பதை மறந்து நாட்டிற்குள்ளேயே நீ, நான் என்று சண்டையிட்டு சாதியின், மதத்தின், மொழியின் பெயரால் பிரிவதும், ஒற்றுமை இல்லாமல் இருப்பதும் நாட்டிற்குக் கேடு விளைவிக்கும் என்பதை எடுத்துக்காட்டுவதாகவே அமைகிறது “நாட்டில் நடப்பது” என்னும் அறிஞர் அண்ணாவின் இந்த நாடகம்.

<u>அசாமியர் குடும்பம் :</u>

சிலுகுரி இந்திய மாநிலம் மேற்கு வங்காளத்தில் அமைந்துள்ள ஒரு நகரமாகும். அங்கு அசாம் சட்டமன்ற உறுப்பினர் தனது மனைவி மக்களுடன் இரயில் நிலையத்தில் காத்துக் கொண்டு இருந்தார்.

அப்பொழுது அங்கு வந்த சில வங்க இளைஞர்கள் மிகுந்த கோபத்துடன் பேசிக் கொண்டு அசாமியர் இருக்குமிடம் நோக்கி வந்தனர்.

<u>இரயிலடியில் ஆதரவற்ற குழந்தைகள்:</u>

அதே சிலுகுரி இரயிலடியின் மறுபுறம் சிறுவர், சிறுமியர் அழுகையுடன் நிற்பதைக் கண்டு அந்த வங்க இளைஞர்கள் அவர்களை நோக்கிச் சென்று யார் நீங்கள்? வங்காளிகள்தானே நீங்கள்? இங்கு ஏன் நிற்கிறீர்கள்? என்று கேட்க அதற்கு அந்தக் குழந்தைகள் அழுதுகொண்டே அம்மா, அப்பா என்று கூறி அழுதுவிட்டு மீண்டும் அம்மா, அப்பா செத்துப் போய்விட்டார்கள் என்றனர். மேலும் கோபம் கொப்பளித்துக் கொண்டு வந்தது அவ்விளைசர்களுக்கு.

<u>வங்க இளைஞர்களின் சினம்:</u>

சிறுவர்களை விசாரித்துக் கொண்டிருந்த இளைஞர்களின் பார்வை மறுபடியும் அங்கு நின்று கொண்டிருந்த அசாமியர் பக்கம் வெறியாகத் திரும்பியது. இளைஞர்களின் ஒருவன் அந்த அசாமியைப் பார்த்து இந்தக் குழந்தைகளின் பெற்றோரைக் கொன்ற அசாமியன் யார்? என்று தெரியுமா? என்றான்.

உடனே அந்த அசாமியர் ஐயோ இந்தக் குழந்தைகளின் பெற்றோரைக் கொன்றுவிட்டார்களா? என்று பரிதாபத்துடன் பேசினார். இதனைக் கேட்ட இளைஞன் உனது பரிதாபம் யாருக்கு வேண்டும் என்று எரிச்சலுடன் எச்சரித்தான்.

<u>வங்காளிகளின் நிலை:</u>

ஆவேசமாகப் பேசிய இளைஞன் எங்கள் இனத்தவரைப் படுகொலைகள் செய்து விட்டு இங்கு நீங்கள் உல்லாசமாக அலைகிறீர்கள். அதோடு நிறுத்தாமல் புத்திமதிகளையும் நீங்கள் எங்களுக்குச் சொல்கிறீர்களா? என்றான். அரவிந்தகோஷ் உபதேசம் செய்தது அந்தக்காலம். அதுபோல் இன்று இங்கு ஓர் அசாமியன் வந்து வங்கத்தில் உபதேசம் செய்வதுதான் இந்தக்காலமாக இருக்கிறது என்று கூறி கோஸ்வாமி குடும்பத்தை முற்படுகின்றனர் அந்த இளைஞர்கள்.

கலவரம்:

கோஸ்வாமியைத் தாக்குகின்றனர். இளைஞர்கள் அவர் மனைவியையும் தாக்குகின்றனர். அவர்களைத் தடுக்கிறாள். கோஸ்வாமி மீண்டும் இளைஞர்களின் தாக்குதலுக்கு ஆளாகுகின்றார். எங்கள் வங்கத்துப் பெண்களும் இப்படித்தானே தாக்கப்பட்டனர், மானபங்கப்படுத்தபட்டனர். அதை மறுப்பீர்களா? அது உங்களுக்குத் தவறாகத் தெரியாதா? என்றும் கேட்கின்றனர் அந்த இளைஞர்கள்.

இதைக் கேட்ட அசாமியர் அது தவறுதான். அதை நான் வன்மையாகக் கண்டிக்கிறேன் என்கிறார். இதைக்கேட்டு மேலும் ஆத்திரம் கொண்ட அந்த இளைஞர்கள் இவன் நடிக்கிறான். மேதாவிபோல பேசிகிறான். நம்மிடம் சாமர்த்தியமாகப் பேசுகிறான் என்று கூறிக் கொண்டே அந்த இடத்திலேயே அவரை அடிக்கத் தொடங்கினார்கள். அந்த இளைஞர்களின் ஒருவன் இவனைக் கொல்ல வேண்டும் என்கிறான். அதற்கு மற்றொருவன் இல்லை, கொல்வதை விட அடித்து துரத்தினால் அசாமியர்களுக்குப் பயம் வரும். நல்ல புத்தியும் கிடைக்கும் என்கிறான். அசாமியரையும் அவர் குடும்பத்தையும் சுற்றி வளைத்துத் தாக்குதல் நடத்துகின்றனர். மனைவியின் மீதும் தாக்குதல் நடத்தப்படுகிறது. ஐயோ! அடிக்காதீர்கள், அடிக்காதீர்கள்! என்று கூச்சலிடுகின்றனர். அந்த இளைஞர்கள் வங்கத்தாரைத் தாக்குவது நியாயமா? தர்மமா? என்று கேளுங்கள் உங்கள் நாட்டவரை என்று சொல்லிச் சொல்லி அடிக்கின்றனர்.

இதைக்கண்ட அங்குக் கூடியிருந்தவர்களில் சிலர் சிரிக்கிறார்கள் சிலர் அங்கும் இங்குமாக உலாவுகின்றனர். சிலர் கண்டும் காணததுபோல் இருக்கிறார்கள்.

காவல்துறையினர் வருகை:

இந்தக் தாக்குதல் நடந்த இடம் நோக்கிப் போலிஸ் வருகிறது. கலவரத்தை அடக்க முயல்கின்றனர் போலீசார். பாதுகாப்பு கருதியும் வேறொரு பெருங்கூட்டம் கூடுகிறது. கலவரத்தைக் கட்டுக்குள் கொண்டவர துப்பாக்கிச் சூடு நடத்தப்படுகிறது.

போலீசார் நடத்திய துப்பாக்கிச் சூட்டில் ஐந்து பேர் இறந்தனர். அவர்களெல்லாம் வங்காளிகள். குண்டடிப்பட்டு இறந்த ஐந்து பேரையும் கண்ட வங்க இளைஞர்கள் போலீசாரைப் பலவாறு பேசுகின்றனர். இனப்பற்று இல்லாத போலீசார், சூடு சொரணை இல்லாத ஆட்சியர்கள் என்றும் வங்கத்தில் அசாமியருக்காகப் போலீசு இருக்கிறது. ஆனால் அசாமில்தான் வங்காளர்களுக்காகப் போலீசு இல்லை என்று போலீசாரின் நடவடிக்கையைக் கண்டித்துப் பேசுகிறார்கள்.

கலகம் விளைவித்தவர்கள் கலைந்து செல்கிறார்கள். கோஸ்வாமி குடும்பம் பாதுகாப்புடன் அசாமிற்குப் புறப்டுகிறது.

கௌஹாத்தி இரயில் நிலையம்:

இந்நகரம் பிரம்மபுத்திரா ஆற்றின் கரையில் அமைந்துள்ளது. கௌஹாத்தி வடகிழக்கு இந்தியாவில் மிகப்பெரிய நகரமாகும். உயிர்தப்பி வந்த அசாமிய குடும்பம் பற்றிக் கேள்விப்பட்டு கூட்டம் கூடியது.

கூடிய கூட்டத்தில் பலரும் பலவாறாகப் பேசினார்கள். பட்டப்பகலில் பகிரங்கமாக இரயிலடியில் மடக்கி கொண்டு அடித்திருக்கிறார்கள். அவர் சட்டமன்ற உறுப்பினர் என்று சொல்லாமலா இருந்திருப்பார்? நீ யாராக இருந்தாலும் என்ன! நீ ஒரு அசாமியன் என்று தாக்கியிருப்பார்கள். இங்கு குடல் தெரிக்க ஓடினார்கள், காலைப்பிடித்து கெஞ்சினார்கள், வங்காளப் பெண்களையும் கடுமையாக தாக்கினோம் இங்கே சும்மா இருந்துவிட்டு அங்கே வீரத்தை காட்டுகிறார்கள் கோழைகள் என்று சிலர் பேசினர்.

சிலர் வந்து அசாமியர் மற்றும் மனைவி மக்களிடம் ஆறுதல் சொன்னார்கள், போலீசாரைக் குறை கூறினார்கள். இதற்குத் தகுந்த பதிலடி கொடுக்க வேண்டும் என்றார்கள். நாட்டுப்பற்று, மொழிப்பற்று, இனப்பற்று அற்றவர்களின் பிடியில் அசாம் சிக்கிக் கிடக்கிறவரையில் எல்லாக் கொடுமைகளையும், இழிவுகளையும் நாம் சுமக்கத்தான் வேண்டியிருக்கிறது என்று சில அசாமியர்கள் அலுத்தும், புலம்பியும் பேசினர்.

<u>பத்திரிக்கையாளர் வருகை:</u>

பத்திரிக்கைச் செய்தி சேகரிப்போர் வருகின்றனர். என்ன நடந்தது? ஒன்று விடாமல் சொல்லுங்கள் விளக்கமாக! என்று கேட்கின்றனர். நான் அசாமிய இதழ்காரன். அவர்கள் மூட்டிய கலகம், தாக்கிய கொடுமை எல்லாவற்றையும் பத்திரிகையில் போட வேண்டும். நீங்கள் ஒரு பிரமுகர் என்று தெரிந்துமா தாக்கினார்கள் என்று சரமாரியாக கேள்விக் கெட்டனர். அவர்கள் கேள்விக்கு எல்லாம் பதிலளிக்கிறார்.
அசாமியர் தன் வீட்டிற்குப் புறப்படுகிறார். அங்குக் கூடியிருந்தவர்கள் வங்காளிகள் ஒழிக! வங்காளியே ஓடிப்போ! அசாமியரே ஒன்று படுக! என்று முழக்கம் செய்தனர்.

<u>அசாமியரின் மகள்:</u>

அசாமியர்கள் போட்ட கோஷத்தைக் கண்டு பயப்படும் அசாமியரின் மகள் தன் தாயிடம் அம்மா எனக்குப் பயமாக இருக்கிறது என்கிறாள். ஆமாம் சும்மா விடுவார்களா என்றாள் தாய்.

இதைக்கேட்ட அச்சிறுமி இது என்னம்மா அக்கிரமம்! வங்காளத்திலே, அசாமியரை வெட்டுவார்கள், அசாமிலே வங்காளியை வெட்டுவார்கள் என்றால், இது நாடா? காடா? என்று கேட்கிறாள்.

<u>முடிவுரை:</u>

தம் நாடகத்தின் வாயிலாக பல சீர்த்திருத்தக் கருத்துக்களை தந்து மக்கள் பயனுற வகைசெய்தவர் அறிஞர் அண்ணா. அசாமியரும் வங்காளியரும் சண்டையிடுகையில் அப்பாவி பொதுமக்கள் நிலையை நாடகத்தில் நேர்த்தியாகவும், நேரில் காண்பது போலவும் கையாண்டு இருப்பார்.

ஒழித்தும் அழித்தும் வாழ்வது அல்ல வாழ்க்கை. இவ்வுலகில் ஒருவனை அழித்து மற்றவன் வாழ்வது சாத்தியமல்ல. உயிர்கள் விலைமதிப்பற்றது என்பதை அனைவரும் உணர வேண்டும். போட்டியும், பூசலும் நிறைந்து இருக்கும் நாட்டில் வாழும் மனித நலமும் குறைந்து போகும் என்பதில் ஐயமில்லை என்பதை ’பாரதம்’ என்னும் நாடகத்தின் மூலம் உணர்த்தியிருக்கிறார்.

16. டாக்டர். ஆறு. அழகப்பனின் ‘கொல்லிப்பாவை’ நாடகம் உணர்த்தும் கருத்தினை கட்டுரைக்க.

<u>முன்னுரை:</u>

நடந்த நிகழ்வுகளை எல்லாம் உண்மைக்கு மாறுபாடின்றி எடுத்துரைப்பது வரலாற்று நாடகங்களின் இயல்பாகும். நாடகத்தின் சுவை மிகுதிக்காகச் சில நிகழ்வுகளும், கதாபாத்திரங்களும் இவற்றில் படைத்துக் கொள்ளப் பெறும். ஒரு சில வரலாற்று நிகழ்வுகளை மையப்படுத்திப் பிற பகுதிகள் புனைந்து எழுதப் பெறுதல் உண்டு. அவ்வகையில் எழுதப்பெற்ற இந்நாடகம் ‘கொல்லிப்பாவை’ என்பதாகும்.

<u>நாடகத்துறையில் ஆசிரியர்:</u>

நாடகப் படைப்புப் பாணியில் குறிப்பிடத் தகுந்தவர் டாக்டர். ஆறு.அழகப்பன். இவர் வரலாறு, வாழ்க்கை வரலாறு, சமூகம், எள்ளல், இலக்கியம் எனும் ஐவகை தன்மையில் நாடகங்கள் படைத்துள்ளார். திருமலை நாயகர்கள், முத்துச்சிப்பி, திருவள்ளுவர், எள்ளல் நாடகங்கள், நாடகச்செல்வம் போன்றன இவருடையது.

<u>நாடக மாந்தர்கள்:</u>

வல்வில் ஓரி; மலையமான் திருமுடிக்காரி; தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறை; அரிசில் கிழார்; வன்பரணர்; ஓரியின் மனைவி மாரி. இவர்களுடன் தச்சர், அமைச்சர், படைத்தலைவன், விறலி, இசைப்பாணர்கள், வீரர்கள், ஒற்றன் முதலியோர்கள் கதாப்பாத்திரங்களாக படைக்கப்பட்டு கதைக்கு மெருகூட்டியுள்ளார் நாடக ஆசிரியர்.

<u>தந்தக்கட்டில்:</u>

சேர நாட்டின் எல்லையைப் பெருக்கி, தனது விற்கொடியை பட்டொளி வீசி பறக்கச் செய்தான் இரும்பொறை. தன்னை எதிர்த்து வந்த படைகளையும் விரட்டியடித்து, தானாகவே நடத்திய போர்களிலும் வெற்றி மாலையைச் சூடியவன். சென்ற இடமெல்லாம் பெற்ற வெற்றியால் புகழின் உச்சத்தின் இருந்தவன் இரும்பொறை.
அயிரமலையில் உள்ள சேரகுலத்தெய்வமாகிய கொற்றவைக்கு பெருவிழா எடுக்க ஏற்பாடு செய்தான். அதன்படி பகைவேந்தர்களின் யானைகளைக் கொன்று எடுக்கப்பெற்ற நல்ல தந்தத்தால் கட்டில் செய்து அதில் கொற்றவையை அமர்த்தி விழாவினை எடுக்க ஏற்பாடுகள் நடந்தது.

அரண்மனையை ஒட்டி அருகேயிருந்த கலைக்கூடத்தில் தச்சர்கள் ஒன்று கூடி யானைத் தந்தத்தால் கட்டில் செய்து கொண்டிருந்தார்கள். இரும்பொறை கலைக்கூடத்தைப் பார்வையிட்டுக் கொண்டே வந்தான். அவனைத் தொடர்ந்து படைத்தலைவர்கள் சென்றனர்.
தலைமைத் தச்சரிடம் தெய்வக்கட்டில் எத்தனை நாளில் உருவாகும் என்று கேட்க, தச்சன் ஒரு சில தினத்தில் முடித்துவிடலான் என்றான்.

<u>தந்தக் குவியல்கள்:</u>

யானைத் தந்தங்கள் குவியல் குவியலாக வைக்கப்பெற்று இருந்தன. அதனைக் கண்ட இருப்பொறை, படைத்தலைவரைப் பார்த்து, இந்தக் குவியல் எந்தப் போரில் பெற்றது எனக் கேட்கிறான்.

முதல் குவியலைக் காண்பித்து இது கழுவுள் கொல்லி கூற்றத்தில் வெற்றி பெற்றபோது பெற்ற யானைத் தந்தங்கள். மற்றொரு குவியலை காண்பித்து இது கொங்குநாட்டு வேளிரைக் கொன்றபொழுது பெற்றது என்றான் படைத்தலைவன். இதைக்கேட்ட இரும்பொறை வேளிரை ஏளனம் செய்து விட்டு, அடுத்த குவியலைக் கண்டு எங்கு பெற்றது எனக் கேட்கிறான். இவை சோழனிடம் பெற்றவை என்றவுடன், புலிக்கொடியோனின் பட்டத்து யானைகளா எனக்கூறி நகைக்கிறான்.

<u>அரிசில் கிழார் வருகை:</u>

அங்கு வந்த அரிசில் கிழார் இரும்பொறையின் வீரச்சிறப்பினை எடுத்துரைக்கிறார். உன் வீரத்தை அறியாதவர்கள் அறிவற்றவர்கள், அறியாமையில் உள்ளவர்கள், உன்னை எதிர்க்கும் ஆற்றல் இல்லாதவர்கள். உனது வீரத்தை நாடே அறியும்; நான் அறியாததா? என்று கூறி கொற்றவைக்குச் செய்யும் இந்தத் தந்தக் கட்டிலில் அமரும் கொற்றவைகூட

உன் வீரத்தைக் கண்டு அஞ்சக் கூடும் என்று மேலும் புகழ் மாலையைச் சூட்டுகிறார் அரிசில்கிழார்.

இதைக்கேட்ட இரும்பொறை வெற்றிக் களிப்பில் இனி ஒரு பகைவரும் இல்லை. எல்லா திசைகளிலும் 'வில் ஆட்சியே' என்று பெருமிதம் கொள்கிறான்.

அப்பொழுது கிழார் குறுக்கிடுகிறார்.

<u>கொல்லிமலையின் சிறப்பு:</u>

வள்ளல் ஓரிக்கு உடைமையாகவும் புலவர்க்கு எல்லாம் நிழலாகவும் இருந்து வரும் கொல்லிமலை வளமைக்கு ஓர் எடுத்துக்காட்டு. வான் பொய்ப்பினும் தான் பொய்யா வளம் உடைய மலை. அந்த மலையில் மா, பலா, வாழை, கொய்யா போன்ற கனி வகைகள் உண்டு. சுவைமிகுந்த தேன் உண்டு. நிழல் உண்டு. எல்லாம் இருப்பதால் 'இல்லை' என்ற சொல்லே அங்கு இல்லை என்று கொல்லிமலையின் சிறப்பினை எடுத்துக்கூறுகிறார் அரிசில்கிழார்.

<u>கொல்லிப்பாவை:</u>

தெய்வங்களால் உருவாக்கப்பட்ட பாவை கொல்லிப்பாவை என்று பாவையின் பெருமைகளை எடுத்துச் சொல்ல விழைகிறார் புலவர். கொல்லிமலையின் மேற்குப் பகுதியில் உள்ள அருவிக்கரை ஓரமாக இருக்கிறது.

முன்பொரு காலத்தில் முனிவரும், சித்தரும் வளம் மிகுந்த கொல்லிமலையைத் தம் தவ வாழிடமாகக் கொண்டிருந்தனர். அப்பொழுது அசுரரும், இராட்சசரும் இவர்களுக்குத் தீங்கினை ஏற்படுத்தினர். இந்தத் கொல்லிப்பாவையைத் தெய்வங்கள் காத்து வருகின்றன என்ற நம்பிக்கையும் உண்டு.

<u>கொல்லிபாவை - எழில்பாவை:</u>

இப்பாவை என்றும் அழியாதது. காற்றால், மழையால், பேரியாலும், கெடுதல் சூழ்ந்தாலும், பெரும்நிலம் விழுந்தாலும் அழிவே இல்லாத 'எழில் பாவை' இந்தக் கொல்லிப்பாவை என்கிறார் அரிசில்கிழார்.

<u>வனப்புமிக்க அழகு</u>

இந்தக் கொல்லிப் பாவையின் அழகினைப் புலவர்கள் தலைவியின் அழகுக்கு ஒப்பிட்டுக் கூறியுள்ளதையும் அரிசில்கிழார் எடுத்துரைக்கின்றார். பரணர் தம் அகப்பாடலில் குறிப்பிட்டுள்ளதையும் சுட்டிக் காட்டுகிறார்.

"தேனுடை நெடுவரை தெய்வம் எழுதிய
விளைமாண் பாவை அன்னோன்
பயம்கெழு பலவின் சொல்லிக் குடவரைப்
பூதம் புணர்த்த புதிதுஇயல் பாவை
விரிகதிர் இளவெயில் தோன்றி குடவரைப்
பாவையின் மடவந் தனளே
கருங்கட் தெய்வம் குடவரை எழுதிய
நல் இயல் பாவை அன்ன"

என்ற பாடலைச் சொல்லி, மேலும் கொல்லிப் பாவையினைக் காணக் கண்கள் கொடுத்து வைத்திருக்க வேண்டும் என்று பாவையின் பெருமையைக் கூறுகிறார்.

இரும்பொறையின் எண்ணம்:

இத்தகைய அழகான கொல்லிப் பாவையும், வளமிக்க கொல்லிமலையும் இந்நேரம் எனக்கல்லவா சொந்தமாயிருக்க வேண்டும் என்கிறான். இது சாத்தியமே என்று சொல்லி, கொல்லிமலை இனி உங்கள் காலடியில் என்கிறார் வன்பரணர். அந்நேரம் வருகிறார் மலையமான் திருமுடிக்காரி.

மலையமான் திருமுடிக்காரி:

பெருஞ்சேரல் இரும்பொறையின் நண்பர், இரும்பொறையின் வெற்றிக்குக் காரணமானவர், தக்க சமயத்தில் வந்தீர் எனப் புகழ்ந்து பேசிய இரும்பொறை, ஓரியின் கொல்லிமலை பற்றி பேசுகிறான். இதைக்கேட்ட காரி, ஓரியின்மீது படையெடுக்க இது தக்கசமயம் என்றும் மேலும் ஓரி இப்போது கைலயார்வத்தில் மூழ்கியிருப்பது தன் ஒற்றன்வழி அறிந்ததாகவும் தெரிவிக்கின்றான்.

அரிசில் கிழாரின் வருத்தம்:

இதனைக் கேள்வியுற்ற புலவர், இரும்பொறையை நோக்கி, வேந்தே! நான் புராணம் முதல் புலவர்கள் போற்றும் கொல்லிமலையின் பெருமையையும் கொல்லிப்பாவையின் பெருமையையும் கூறினேன். போர் என்கிற இந்த எண்ணத்தைக் கைவிடுங்கள்! மீண்டும் போர் வேண்டாம் என்கிறார். அதற்கு இரும்பொறை அரசியலில் புலவர்களுக்கு இடமில்லை என்கிறான். இதைக் கேட்ட கிழார் திகைப்புடன் நிற்கிறார்.

இரும்பொறைக்கு உதவும் காரி:

கொல்லிமலை மட்டும் ஏன் ஒரு முள்போல் இருக்க வேண்டும் அதனையும் தன் நாட்டுடன் இணைக்க வேண்டும்.

இரும்பொறையின் ஆணை:

இரும்பொறை தன் அமைச்சரை நோக்கி வழக்கம்போல் காரிக்கு வேண்டிய உதவிகளைச் செய்யுங்கள் என்கிறான். அதற்கு காரியின் உதவியும் வேண்டும் என்கிறான் இரும்பொறை, அதற்குக் காரி, ஓரியை எதிர்க்க இந்தக் காரி போதும். உங்களோடு போரிடும் தகுதி ஓரிக்கு இல்லை என்று இறுமாப்புடன் கூறி, ஓரியை வென்று கொல்லிமலையை உங்களுக்கு உரிமையாக்குகிறேன் என்று உறுதியும் செய்கிறான்.

வேலை நிறுத்தம்:

தச்சர்களை நோக்கி இரும்பொறை ஓரியின் பட்டத்து யானையின் விலா எலும்புகள் வரும் வரை தந்தக்கட்டில் செய்வதை நிறுத்த ஆணையிடுகிறான்.

கொல்லிமலை அடிவாரம்:

கொல்லிமலைத் தலைவனான ஆதன் ஓரியைப் பாரப்பதற்கு இசைக் கருவிகளுடன் இசைப்பாணர்கள், விறலி, வன்பரணர் ஆகியோர் மலையடிவாரத்தில் உள்ள பெரும் காட்டின் வழி நடந்து வருகின்றனர். இவர்கள் வருவது, பள்ளம் நோக்கி வரும் வெள்ளம் போல பாணர்கள் ஓரியைக் காணப் புறப்பட்டனர். அங்ஙனம் வருகையில் முன் நடந்து வந்த வண்பரணரின் காலில் உடும்பு தட்டுப்பட்டது. அந்த உடும்பு அம்பு ஒன்றால் தைக்கப்பட்டிருந்தது.

இதனைக் கண்ட பரணர் ஒருவன் யானை - வேட்டை, புலிவேட்டை கேள்விப்பட்டிருக்கிறோம். இதென்ன ஓரியின் காட்டில் உடும்பு வேட்டை என்று சொல்லி சிரிக்கிறான்.

அடுத்ததாக ஒரு பாணன் இதோ இங்கு ஒரு பன்றி வேட்டையாடப்பட்டிருக்கிறது என்றான். அதற்கு, உடனே விறலி பன்றியை வேட்டையாடும் வீரன் உள்ள மலையா? இது என்கிறாள். மற்றொரு பாணன் மான் ஒன்றும் இங்கு அம்பு துளைக்கப்பட்டு இறந்துகிடக்கிறது என்கிறான். அதற்கு விறலி வேட்டையின் இலக்கணம் தெரியாத யாரோ எதனைக் கொல்வது? என்று தெரியாமல் வேட்டையாடி இருக்கிறான். அப்படிப்பட்ட வேட்டுவன் இந்த மலையில் வாழ்கிறான் என்கிறாள்.

அதற்குள் இன்னொரு பாணன் அதோ ஒரு புலியும் வேட்டையாடப்பட்டிருக்கிறது என்கிறான். இன்னொருவன் இங்கு ஒரு யானையும் வீழ்த்தப்பட்டு கிடக்கிறது என்று சொல்கிறான்.

உடனே விறலி, இது என்ன விந்தையான வேட்டையாக இருக்கிறதே! ஒரே அம்பில் ஒரே இடத்தில் யானை வேட்டை! புலிவேட்டை! மான் வேட்டை! பன்றி வேட்டை! உடும்பு வேட்டை! என்கிறாள். வியப்புடன் எல்லாவற்றையும் உற்று நோக்குகின்றனர். வன்பரணர் இவை எல்லாவற்றையும் உற்று நோகி கற்பனையில் காண முடியாத இந்த வேட்டையினைச் செய்தவன் எனக்கு யாரென்று தெரிந்துவிட்டது என்கிறார்.

அவர் யார் என்று இசைத் தமிழால் சொல்கிறேன். நீங்கள் உங்கள் இசைக் கருவிகளை எடுத்துக்கொள்ளுங்கள் என்கிறார்.

<u>வன்பரணர் இசைத்தமிழ்:</u>

வன்பரணரின் சொற்படி இசைக்கலைஞர்கள் முழவு, யாழ், பெருவங்கி, கல்லி, சிறுபறை, பதலை முதலிய இசைக்கருவிகளை இயக்குகின்றனர்.

“வேழம் வீழ்ந்த விழுதொடைப் பகழி

.................................................................................................................

என்று பாடுகிறான். வன்பரணரின் பாடல் கேட்ட வல்வில் ஓரி வேகமாகச் செல்லும் குதிரையில் வந்து இறங்குகிறான்.

ஓரியின் அம்பு ஒரே நேரத்தில் யானையைத் துளைத்து, அந்த யானைக் கொல்லக் காலம் நோக்கி வாயைப் பிளந்திருந்த புலியின் வாயைத் துழவி, வழியில் நின்ற கலைமானை ஊடுருவி, அதன் பக்கத்தில் இருந்த காட்டுப்பன்றியை வீழ்த்தி, அதன் அயலிலிருந்த புற்றில் கிடந்த உடும்பின் உடலில் தைத்து நின்றது. இத்தகைய பேராற்றல் பெற்றதால் தான் ‘ஆதன் ஓரி’ என்ற பெயர் மறைந்து ‘வல்வில் ஓரி’ என்று அழைக்கலானார்கள். வாழ்க வில்லாற்றல் என்று ஓரியை புகழ்ந்து பாடினார் பரணர்.

புலவரின் புகழ்ச்சிக்கு நன்றி உடையவனாகிய ஓரி, தான் காட்டில் தங்கியிருந்த கூடாரத்திற்கு வன்பரணரையும் அவருடன் வந்திருந்த இசைக்கலைஞர்களையும் அழைத்துச் செல்கிறான்.

<u>ஓரியின் விருந்தோம்பல் பண்பு:</u>

வல்வில் ஓரி அனைவருக்கும் பெரும் விருந்து நடத்துகிறான். தெவிட்டும் அளவிற்கு கலைஞர்கள் பெருந்தட்டில் இருந்த இறைச்சியை எடுத்து வைக்கிறான். அதனைச் சுவைக்கச் சொல்கிறான். சுவை குறித்தும் கேட்கிறான். அதற்கு வன்பரணர் மென்மையாக இருக்கிறது என்கிறார். இது, தான் வேட்டையாடிய மான் என்றும் அதனைப் பக்குவப்படுத்தியுள்ளதையும் சொல்லி மீண்டும் இன்னொரு துண்டை வைக்கிறான் ஓரி.

<u>வன்பரணரின் புகழுரை:</u>

வழிப்போக்கர்களாகிய எங்களுக்கு நீ வேட்டையாடிய மானை உணவாகப் பரிமாறினாய். ‘பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பியும்’, ‘இந்திரர் அமிழ்தமே கிடைத்தாலும் தான்

மட்டும் அருந்த நினைக்காமல் பிறரையும் அழைக்கும் உன்னைப்போல் ஒரு சிலர் இருப்பதால்தான் இந்த நிலவுலகம் நிலைத்து நிற்கிறது'. உன் புகழ் மென்மேலும் ஓங்குக என்று புகழ்ந்தார்.

தாயினும் சிறந்ததோர் தாய்மையைத் தங்களிடம் கண்டோம் என்கின்றனர். மேலும் ஓரி, நீங்கள் விரும்புகின்ற வரை இங்கு விருந்தாளியாக இருந்து செல்லலாம் என்கிறார். அதற்கு வன்பரணர் ஓரியினது மலை எங்கள் மலை, மீண்டும் கட்டாயம் வருகிறோம் என்று கூறி விடைபெற்றுச் சென்றனர்.

ஓரியின் ஓரி:

அவர்களை அனுப்ப மனமில்லாத ஓரி, வன்பரணரிடம், நான் தரும் சிறிய பொருளையாவது வேண்டாம் எனச் சொல்லாது பெற்றுச் செல்லுங்கள் என்கிறார். தங்கியிருந்த கூடாரத்திற்கு வெளியில் வந்த ஓரி, ஓரி… ஓரி…. ஓரி என்று அழைக்கிறார். இதைக்கேட்ட வன்பரணர் திடுக்கிட்டு வியந்து, இதுவென்ன கொல்லிமலையில் இரண்டு ஓரிகள் என்று வினவுகிறார். அதற்கு ஓரி 'ஆம், இன்னொரு ஓரியும் இங்குண்டு' எனச் சொல்லி 'ஓரி' என்றழைக்க அவரருகே மேய்ந்து கொண்டிருந்த ஓரியினது குதிரை ஓடி வந்து நின்றது.

இதைக்கண்ட வன்பரணர் உலகில் உள்ளோர் ஓரி என்று ஓடி வருகின்றனர். அதுபோல நீ ஓரி என்று அழைத்தால் யாராவது ஓடிவர வேண்டும் என்று உன் குதிரைக்கும் உன் பெயர் சூட்டினாயா? என்கிறார்.

ஈகைப் பண்பு:

ஓரியின் (குதிரையின்) முதுகில் முன்னேற்பாடாக, தன்னை நம்பி இந்தக் கொல்லிமலைக்கு வருவோர் வெறுங்கையுடன் ஏமாந்து திரும்பிவிடக் கூடாது என்று செல்வவளம் விளந்த பொன்னையும், மணியையும் வைத்திருந்த மூட்டைகளைப் பெற்றுச் செல்லும்படி வேண்டுகிறான் ஓரி.

இதைக் கண்ட வன்பரணர் ஓரியின் பண்பினை நினைத்து வியக்கிறார். எப்படி புகழ்வது என்று தெரியாமல் திகைக்கிறார். உன்னை நினைத்து வறியோர் கூட்டம் புறப்படும் முன்பு நீ அவர்களுக்காகக் காத்து இருக்கிறாயே! இவ்வுலகம் அழிந்தாலும் நீ அழியமாட்டாய்! உன் புகழினை யாராலும் அழிக்க முடியாது! என்று வாழ்த்திச் செல்கிறார். அவர்களுடன் சிறிது தூரம் வந்து பிரியாவிடை அனுப்புகிறான் ஓரி.

ஒற்றனின் வருகை:

அந்த நேரத்தில் அங்கு சேர நாட்டிற்குச் சென்ற ஒற்றன் வருகிறான். ஓரியை வணங்குகிறான். வந்த செய்தியை சொல்லத் தொடங்கினான். நான் தச்சுத் தொழில் தெரிந்தவன் என்று சேர நாட்டு தச்சர்களோடு தொடர்பு கொண்டேன். அவர்கள் எடுக்கும் கொற்றவை விழாவிற்கு தங்களது பட்டத்து யானையின் எலும்பும் வரவேண்டும் என்று தெய்வக்கட்டில் செய்வதை நிறுத்தி வைத்துள்ளனர். கொல்லிமலையின் வளத்தையும் கொல்லிப்பாவையையும் பற்றிக் கேள்விப்பட்ட சேர மன்னர் இவற்றை அடையவும் உரிமையாக்கிக் கொள்வதற்காகவும் முள்ளூர் மன்னர் திருமுழுக்காரியின் உதவியினை நாடியுள்ளார். காரியும் கொல்லிமலையை உரிமையாக்கிக் கொடுக்கிறேன் என்று சூளுரைத்தான். எனவே எந்நேரத்திலும் மலையமானுடைய படைகள் நம் மலையை முற்றுகையிடலாம் என்ற செய்தியை அடிபணிந்து ஓரியிடம் கூறினான்.

ஓரியின் மனைவி மாரி:

அழகே வடிவானவள்; பாவையை ஒத்தவள், ஓரியின் மனைவி மாரி. வெற்றித் திலகமிட்டு ஓரியை அனுப்புகிறாள்; படைவீரர்களுடன் ஓரி அம்புக்குவியல் அடங்கிய அம்பறாதூணியை சுமந்துகொண்டு படைவீரர்களை வழிநடத்திச் செல்கிறான். மாரி, ஓரியின் கழுத்தில் வஞ்சிப் பூவைச் சூடி இரத்தத் திலகமிட்டு ஓரிக்கு விடை தருகின்றாள்.

ஓரியின் வீரவுரை:

கொல்லிமலை தெய்வத்தை வணங்குகிறான். முள்ளூர் மன்னன் காரியும் அவன் வீரர்களும் நம் அம்புகளுக்கு இரையாக வேண்டும் என்று சூளுரை செய்து முள்ளூர் நோக்கி அணிவகுத்துச் செல்கிறான்.

காரியின் கலக்கம்:

ஓரி படையெடுத்து வரும் செய்தி அறிந்த காரி கலங்குகிறான். முன்னேற்பாடாக போர் ஆயுத்தங்கள் செய்யாத காரணத்தினால் காரியின் வீரர்கள் எண்ணற்றோர் இறக்கின்றனர். தான் இதுவரை பெற்ற வெற்றியை ஓரி இறக்கச் செய்துவிடுவான என்று எண்ணி அச்சம் கொள்கிறான் காரி.

காரியின் சூழ்ச்சி:

போர் நிகழ்த்த வேண்டிய முறையை மாற்றுகிறான் காரி. சூழ்ச்சி செய்து மறுநாள் போரில் ஓரியின் படைவீரன்போல் ஒருவனை உடையணிந்து வரச்செய்து, அவனை ஓரியிடம் கொல்லிமலைக்குள் பகைவர்கள் புகுந்து விட்டனர் என்றும், கொல்லிப்பாவையை உடைத்துவிட்டனர் என்றும் சொல்லச் சொல்கிறான்.

ஓரியின் உயிர் பிரிந்தது:

படைவீரன் சொன்ன செய்தி கேட்ட ஓரி கலக்கம் கொள்கிறான் அவனுடைய "வல்வில் நழுவுகின்றது", இதைக்கண்ட காரி தனியனாய் நிற்கும் ஓரியின் வயிற்றில் நீண்ட வேலினைப் பாய்ச்சுகிறான். அவ்விடத்திலேயே ஓரி உயிர் பிரிகிறது. சூழ்ச்சியில் கொல்லப்பட்ட ஓரியின் உயிர் கொல்லிப்பாவையை கொல்லித்தாய் என்று கூறியபடி பிரிகிறது.

பாவையின் நிலை:

அங்கு வந்த இரும்பொறை காரியைப் பலவாறு புகழ்கிறான். சூழ்ச்சியினால் பெற்ற வெற்றியைப் பற்றிப் பேசுகின்றனர். காரிக்குப் பல பரிசுகளைத் தருவதாகவும் கூறுகிறான் இரும்பொறை. அவர்களிருவரும் கொல்லிப்பாவையைக் காணப் புறப்படுகின்றனர்.
கொல்லிமலைக்குச் செல்கின்றனர். அங்கு வந்த வீரன் ஒருவன் கொல்லிப்பாவை கீழே வீழ்ந்து கிடப்பதாகச் சொன்னான். அந்த இடம் நோக்கிச் சென்றனர். பாவையினைக் கண்டு திகைக்கின்றனர். காரி இந்தப் பாவையை மீண்டும் இருந்த இடத்தில் நிறுத்த வேண்டும் என்கிறான். அதன்படி இரும்பொறையும், காரியும் தூக்க முற்படுகின்றனர்.

அதற்கு வன்பரணர், வீழ்ந்து கிடப்பது கொல்லிப்பாவை இல்லை, ஓரியின் மனைவி மாரி என்கிறார். கொல்லிப்பாவை எங்கே என்று கேட்கிறார் இரும்பொறை. அதற்கு வன்பரணர், ஓரியின் மனைவியைச் சுற்றிக் கிடக்கும் சிதறல்களே கொல்லிப்பாவை என்கிறார். இந்தப் பாவையை உடைத்தது யார் என இரும்பொறை கேட்க, ஓரியில்லாத மலையில் கொல்லிப்பாவை இல்லாது இருப்பது அழகு என்று எண்ணி அழித்திருக்கலாம் என்கிறார் வன்பரணர்.

முடிவுரை:

போர்க்களத்திற்கு வராமலே பெரும் தோல்வியைத் தந்துவிட்டாள் ஓரியின் மனைவி மாரி. வெற்றி பெற்றும் கிடைத்த தோல்வி இது. சரி ஓரியின் பட்டத்து யானையின் எலும்புகளாவது கொண்டு சென்று நிறுத்தி வைத்திருக்கும் கொற்றவை வழிபாட்டைச் செய்யலாம் என்று நினைத்தான் இரும்பொறை ஆனால் அம்மலையில் மருந்திற்குக்கூட ஒரு யானையைப் பார்க்க முடியவில்லை. ஓரியை தேடி வரும் இரவலருக்கு அவன் யானைகளை பரிசாக கொடுத்துவிட்டான். யானை வேண்டுமெனில் ஈரவலர் வீட்டிற்கு சென்று பெற்று கொள்ளலாம். ஆனால் இரந்து செல்வது மன்னருக்கு ஆகாது. இன்னொரு வழியைக் கூறுகிறேன் ஓரியால் வேட்டையாடப்பட்ட யானையொன்று இன்னும் காட்டில் வீழ்ந்து கிடக்கிறது. என் பின்னால் வந்தால் காட்டுகிறேன் என்றார் பரணர்.

புலவரே, போதும் ஓரி இருந்த போது புகழ்ந்ததை விட ஓரி இல்லாதபோது எங்களுடன் நகாயாடுவதன் மூலம் மேலும் ஓரியைப் புகழ்கின்றீர்கள். வெற்றி என்று நினைத்தோம். மயக்கம் தெளிந்தபின் உண்மை நிலை உணருகின்றோம். இரும்பொறை காரியைப் பார்த்து கொல்லிப்பாவையும் ஓரியும் இல்லாத மலையில் இனி இருந்தென்ன? படைகள் திரும்பலாம் என்றான்.

17. 'நாற்காலி' சிறுகதையை கி.ராஜநாராயணன் படைத்துள்ள விதத்தை விவரிக்க.

முன்னுரை:

கி.ராஜநாராயணன் கரிசல் இலக்கியத்தின் தந்தை என்றழைக்கப்படுபவர். அருடைய 'நாற்காலி' சிறுகதை ஒரு வீட்டில் நடக்கின்ற இயல்பான நிகழ்வுகளோடு மனிதர்களின் மனம் எத்தகைய சிந்தனைகளைக் கொண்டது என்பதையும் அழகாக எடுத்துக் காட்டியுள்ளது.

நாற்காலி செய்ய முடிவெடுத்தல்:

நாற்காலி என்ற சிறுகதையில் ஒரு குடும்பத்தினர் நாற்காலி வாங்க விரும்புகின்றனர். இக்கதை அக் குடும்பத்துப் பையன் கூறுவதுபோல் அமைக்கப்பட்டுள்ளது. அவ்வீட்டில் முக்காலி மட்டும் இருந்தது. அதில் உட்கார்பவர்களும் சில சமயங்களில் கீழே விழுந்து விடுகின்றனர். ஒரு தடவை அவ்வீட்டிற்கு வந்த சப்ஜட்ஜ் கீழே விழுந்து விடுகின்றனர். ஒரு தடவை அவ்வீட்டிற்கு வந்த சப்ஜட்ஜ் முக்காலியில் அமர்ந்து விழுந்துவிட்டார். அதைக்கண்டு எல்லோரும் நகைக்கும்படி ஆகிவிட்டது. பாட்டி தயிர்கடைவதற்காக வாங்கிய முக்காலி அது. எனவே வீட்டில் ஒரு நாற்காலி இல்லையே என்றுணர்ந்த அக்குடும்பத்தினர் ஒரு நாற்காலி வாங்க விரும்பினர்.

மாமனாரின் வருகை:

மாமனார், வீட்டிற்கு வந்து வழக்கமாக அவர் உட்காரும் தூணில் சாய்ந்து உட்கார்ந்தார். அவருக்கு அம்மா உபசாரம் செய்தாள். காயமிட்ட மோரை வெள்ளி டம்ளரில் கொண்டு வந்து கொடுத்தாள். மாமனார் தன் தங்கைக்காக மாடு வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தவர். அவர் நாற்காலி செய்யப் போவதைப் பற்றிக் கேள்விப்பட்டதும் தனக்கும் ஒரு நாற்காலி வேண்டும் என்று கூறினார். வேப்ப மரத்தில் செய்யலாம் என்று அவர் சொன்னவர், பூவரசங்கட்டையில் செய்யலாம் என்று பெத்தண்ணா சொன்னான். அக்கா,'வெளிர் நிறத்தில் உள்ளவைகள் பார்க்கவே சகிக்காது. செங்கரும்பு நிறத்திலோ, எள்ளுப் பிண்ணாக்கு மாதிரி கறுப்பு நிறத்திலோ இருக்கிற மரத்தில்தான் செய்வது நல்லது' என்றாள். அவள் கூறியதையே அனைவரும் ஏற்றுக்

கொண்டு எங்கள் வீட்டுக்கும், மாமனார் வீட்டுக்குமாக இரண்டு நாற்காலிகள் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டது.

<u>நாற்காலி பற்றிக் குடும்பத்தினர் கருத்து:</u>

நாற்காலி செய்ய அந்த ஊரில் ஒரு தச்சனும் கிடையாது. நகரத்தில் வாங்கலாம் என்றால் அந்த எண்ணத்தை அப்பா நிராகரித்துவிட்டார்.
பக்கத்து ஊரில் ஒரு தச்சன் இருப்பதாகவும், அவன் செய்யாத நாற்காலிகளே கிடையாது என்றும் கவர்னரே அவன் செய்த நாற்காலிகளைப் பார்த்து மெச்சி இருக்கிறார் என்றும் அத்தை சொன்னதை அம்மா ஏற்கவில்லை. தேக்கு மரத்தில் செய்தால் தூக்க வைக்க லேசாகவும் உறுதியாகவும் இருக்கும் என்று பாட்டி கூறினார். வேப்ப மரத்தில் செய்வது நல்லது. அதில் உட்கார்ந்தால் உடம்புக்குக் குளிர்ச்சி என்றும் மூலவியாதி கிட்ட நாடாது என்றும் மாமனார் கூறினார். பூவரசங்கட்டையில் செய்தால் நன்றாயிருக்கும் என்று பெத்தண்ணா கூறினான். செங்கரும்பு நிறத்திலோ அல்லது எள்ளுப் பிண்ணாக்கு மாதிரி கறுப்பு நிறத்திலோ இருக்கிற மரத்தில்தான் செய்வது நல்லது என்று அக்கா கூறினாள்.

<u>நாற்காலி தந்த மகிழ்ச்சி:</u>

இவர்களுக்கு ஒன்றும் மாமனாருக்கு ஒன்றுமாக இரண்டு நாற்காலிகள் செய்யப்பட்டன. இரண்டு நாற்காலிகளும் ஒரேமாதிரி இராம லட்சுமணர்போல இருந்தன. நாற்காலியில் ஒவ்வொருவராக அமர்ந்து பார்த்தனர். யாருக்கும் நாற்காலியிலிருந்து எழவே மனம் இல்லை. கைகளால் தடவி, சப்பணம் போட்டு உட்கார்ந்து பார்த்தான் பெத்தண்ணா. நாற்காலிக்கு உறை தைத்துப் போட வேண்டும். இல்லாவிட்டால் அழுக்காகிவிடும் என்று அத்தை கூறினாள். ஊர்மக்கள், குழந்தைகள், பெரியவர்கள் வந்து தடவிப் பார்த்தார்கள். சிலர் தூக்கிப் பார்த்து நல்ல கனம், உறுதியாகச் செய்திருக்கிறான் என்று தச்சனைப் பாராட்டினர்.

<u>நாற்காலிக்கு நேர்ந்த கதி:</u>

ஒரு நாள் ராத்திரி யாரோ கதவைத் தட்டினார்கள். கதவைத் திறந்து பாரத்தால் ஊருக்குள் முக்கியமான பிரமுகர் ஒருவர் இறந்து விட்டார் என்று கூறி நாற்காலியை வாங்கிச் சென்றனர். இறந்த வீட்டிற்குச் சென்றபோதுதான் தெரிந்தது. 'இறந்தவரை நாற்காலியில் உட்கார வைத்திருந்தது'. எங்கள் வீட்டு நாற்காலிக்குப் பிடித்தது வினை.

<u>நாற்காலியை சுத்தம் செய்தல்:</u>

இந்த நிகழ்ச்சிக்குப்பின் வீட்டில் யாரும் நாற்காலியில் உட்கார விரும்பவில்லை. குழந்தைகள் கொண்டுபோய் தேய்த்துக் கழுவி சுத்தம் செய்த பின்பும் அதன் மேல் இருந்த பயம் அகலவில்லை. ஒரு நாள் வீட்டிற்கு வந்திருந்த விருந்தினர் ஒருவரைக் கட்டாயப்படுத்தி அமரச் செய்தோம். அதன் பின்பு வீட்டுப் பெரியவர்கள் உட்கார்ந்தனர். ஒரு நாள் பக்கத்துத் தெரு சுகந்தி தன் ஒரு வயதுப் பையனை அதில் அமர வைத்தாள். அதன் பின்புதான் குழந்தைகளுக்குப் பயம் அகன்றது.

<u>மீண்டும் இறந்தவர் வீடுகளுக்குச் சென்ற நாற்காலி:</u>

திரும்பவும் ஒருநாள் யாரோ இறந்து விட்டார்கள் என்று நாற்காலியைத் தூக்கிக் கொண்டு போனார்கள். இது அடிக்கடி நடந்தது. நாற்காலியை வருத்தத்தோடு கொடுத்தனுப்புவோம். 'செத்துப்போன ஊர்க்காரன் உட்கார்வதற்காக நல்ல நாற்காலி செய்தோமடா நாம்' என்று அண்ணன் அலுத்துக் கொண்டான். 'நாற்காலி செய்யக் கொடுத்த நேரப் பலன்' என்றாள் அத்தை.

மாமனாரும் நாற்காலியும்:

ஒருநாள் அம்மா மாமனார் வீட்டிற்குப் போய்வரும்படிச் சொன்னாள். அவர் வீட்டிற்குச் சென்றபோது மாமனார் நாற்காலியில் அமர்க்களமாய் உட்கார்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தார். மாமா எதையும் சுத்தமாக வைத்துக் கொள்பவர். அது அவரது சுண்ணாம்பு டப்பியைப் பார்த்தாலே தெரியும். நாற்காலியை அவரைத் தவிர வீட்டில் யாரும் உபயோகிக்கக் கூடாது. காலையில் எழுந்ததும் முதல் காரியமாக் அதைத் துடைத்து வைப்பார். ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்குத் தானே மெதுவாக எடுத்துக் கொண்டு போய்ச் சத்தமில்லாமல் அவ்வளவு மெதுவாக வைப்பார்.

அம்மா சொன்ன தகவலை மாமனாரிடம் சொல்லி விட்டு வீடு திரும்பினேன். அடுத்த முறை நாற்காலிக்காக எங்கள் வீட்டில் இழவு வீட்டுக்காரர்கள் வந்து கதவைத் தட்டியவுடன். 'மாமார்வீட்டில் இருக்கிறது போய்க் கேளுங்கள், தருவார்' என்று சொல்லி அனுப்பினோம். ரொம்பநாள் கழித்து மாமனார் வீட்டுக்கு ஒரு நாள் போன போது அவர் தரையில் உட்கார்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தார். நாற்காலி எங்கே? என்று சுற்றுமுற்றும் தேடினேன். அவர் அமைதியாய், 'அந்தக் காரியத்துக்கே அத்த நாற்காலியை வைத்துக்கொள்ளும் படி நான் கொடுத்துவிட்டேன். அதுக்கும் ஒன்று வேண்டியதுதானே? என்று மிகவும் இயல்பாகக் கூறினார்.

முடிவுரை:

நாற்காலி சிறுகதை மாமனாரின் உயர்ந்த உள்ளத்தைப் பறைசாற்றுகிறது. பொறாமையுடன் அவர் நாற்காலியைக் கேட்டு வாங்கியதாகக் கேட்டு வாங்கியதாகக் கூறினார்கள். ஆனால் அவரோ பெருந்தன்மையுடன் அந்தக் காரியத்திற்கே நாற்காலியைக் கொடுத்துவிட்டதாகக் கூறினார். மனிதர்களின் மனம் ஆசை, கோபம், பொறாமை, பெருந்தன்மை ஆகிய பண்புகள் நிறைந்ததுதான். இருப்பினும் பெருந்தன்மை என்ற பெரிய குணத்தால் மாமனார் என்ற கதாபாத்திரம் உயர்ந்து விளங்குகின்றது.

**18.** வளவ. துரையன் 'சேலத்தார் வண்டி' என்ற சிறுகதை பற்றி விளக்கி எழுதுக.

முன்னுரை:

வளவ.துரையன் எழுதிய சேலத்தார் வண்டி என்ற கதை கால மாற்றத்தால் ஒருவரின் குணநலன்களை வெளிப்படுத்துவதாக அமைகிறது. இன்றையப் போக்குவரத்து வளர்ச்சியில் அன்றிருந்த மாட்டு வண்டிகள் பயணற்றுப் போய்விடுகின்றன. ஆனாலும் வண்டிக்காரரோடு பழகிய உள்ளங்கள் அவர்களை மறப்பதில்லை என்பதை வெளிப்படுத்தும் அருமையான கதை சேலத்தார் வண்டி. அக்கதை அமைப்பு, கருத்து பாத்திரப்படைப்பு பற்றிக் கீழே காணலாம்.

சேலத்தார் வாழ்க்கைப் பின்னனி:

சேலத்தாரின் முன்னோர் நீண்ட நாட்களுக்கு முன் வளவனூர் வந்துவிட்டார்கள். அவர்கள் வழிவந்த மாட்டுவண்டிக்காரரை எல்லோரும் சேலத்தார் என்றே அழைக்கின்றனர். இவர் இரயில் நிலையத்தில் காத்திருந்து பயணிகளை அவரவர் செல்லும் இடங்களுக்கு ஏற்றிக் செல்வார். இரயில் நிலையத்திற்கு வருவோரையும் கூட்டி வருவார். இவரைத் தவிர பிற மாட்டுவண்டிகள் இரயில் நிலையத்தில் நின்றாலும் எல்லோரும் இவர் வண்டியில் செல்வதையே விரும்புவர். பெருமாள் கோவிலுக்குப் பக்கத்தில் ஒரு குடிசை வீட்டில் வசிக்கிறார். இவருக்கு வேணு என்ற மகன் உள்ளான்.

அவன் நன்றாகப் படிப்பதால் அவனை இஞ்சினியல் ஆக்க வேண்டும் என்று விரும்புகிறார் சேலத்தார்.

<u>சேலத்தாரும் பாலாவும்</u>:

கதையில் பாலா என்ற மாடி வீட்டுப் பையன் சேலத்தாரை அறிமுகப்படுத்துகிறான். அவனது தாத்தாவுக்கு சரியில்லை. எனவே அடிக்கடி அவன் வீட்டுக்குக் கம்பவுண்டரை அழைத்துவர சேலத்தார் வண்டியைத்தான் கூப்பிடுவார்கள். அப்படிக் கூப்பிடச் சென்றபோது தான் ஐந்தாம் வகுப்புப் படிக்கும் மாடிவீட்டுப் பையன் பாலா, சேலத்தாரின் மகன் வேணுவைச் சந்திக்கிறான். இருவரும் ஒரே பள்ளியில் படிக்கிறார்கள். அதன்பின் பாலாவும் சேலத்தாரும் அடிக்கடி இரயில் நிலையத்தில் சந்திக்கிறார்கள். இராமாயணம், மகாபாரதக் கதைகளை சேலத்தாரிடம் இருந்து பாலா கற்றுக் கொள்கிறான். சில வருடங்களுக்குப் பிறகு, பாலா சென்னையில் ஒரு நாளிதழில் துணை ஆசிரியராக வேலை செய்கிறான். திருமணம் ஆகிவிட்டது. பத்தாண்டுகள் கழித்துப் பிறந்த குழந்தையைச் சேலத்தாரிடம் காட்டி மகிழ்கிறான் பாலா.

<u>பாலாவின் தற்போதைய வாழ்க்கை</u>:

பாலா சென்னையில் ஒரு நாளிதழில் நிருபராகச் சேர்ந்து, படிப்படியாக முன்னேற்றம் அடைந்து துணை ஆசிரியர் நிலைக்கு உயர்ந்துள்ளார். கார் பங்களா என வசதிகள் பெருகிற்று. சொந்த ஊரான வளவனூருக்கு அடிக்கடி செல்ல முடியவில்லை. திருமணத்திற்குப் பின் பத்து ஆண்டுகள் கழித்துக் குழந்தை பிறந்துள்ளது. அவரது அப்பா காலமாகிவிட்டார். அதனால் அவரது அம்மா வளவனூரில் இருந்த கொஞ்ச நிலங்களையும் விற்றுவிட்டு இவர்களோடு வந்து தங்கிவிட்டார்.

<u>கதைக்கருவும் கதைப்போக்கும்</u>:

சேலத்தார், பயணிகளிடம் பழகிய பழக்கம் பாலாவை மீண்டும் சேலத்தாரைச் சந்திக்க வைத்தது. கால மாற்றத்தால் மாட்டு வண்டிகளைத் தற்போது யாரும் விரும்புவதில்லை. ஆட்டோக்கள் பெருகிவிட்டதால் மாண்டுவண்டி வைத்திருந்த சேலத்தார் வண்டி பயணற்றுக் கிடக்கிறது. ஆனாலும் சேலத்தார் பாலாவைச் சந்தித்தவுடன் பழைய நிகழ்வுகளை நினைவுகூர்ந்து மகிழ்ந்து பாலாவின் குழந்தையிடமும் பாசத்தைக் காட்டுகிறார்.
பாலாவின் அம்மா வளவனூருக்குச் செல்ல விரும்பாதபோதும் பாலா அங்கு சென்றால் சேலத்தாரைச் சந்திக்கலாமே என்று நினைக்கிறான். கதை காலங்களை விவரித்து பாலா சென்னையில் வாழும் வாழ்க்கையை விளக்கி, கதையின் முடிவில் சேலத்தாரின் வாழ்க்கை நிலையும் சேலத்தார் - பாலாவின் அன்பும் வெளிப்படுகிறது.

<u>பாத்திரப் படைப்புகள்</u>:

சேலத்தார்; மாடிவீட்டுப் பையன் பாலா; பாலாவின் அப்பா, அம்மா, தாத்தா, மனைவி; சேலத்தார் மகன் வேணு, கம்பவுண்டர் கோபாலன்.
ஆகியோர் பாத்திரங்களாக இடம்பெற்றுள்ளனர். சேலத்தாரும் பாலாவும் தலைமைப் பாத்திரங்களாக உள்ளனர்.

<u>மொழிநடை</u>:

சேலத்தார் வண்டி சிறுகதையில் மொழிநடை எளிமையாக, இயல்பாக உள்ளது. நீருக்குள் பாசிபோல் என்று அருமையான உவமை இடம்பெற்றுள்ளது. பாத்திரங்களை

அறிமுகப்படுத்துகின்றபோது அவர்ள் இயல்பான பேச்சு மொழியில் பேசுவதுபோல் கதை அமைக்கப்பட்டுள்ளது.

"திருமணமான உடனே தரித்தகரு இவ்வுலகைக்
காணப்பிடிக்காமல் மூன்றாம் மாதத்திலேயே
கலைந்துவிட்டது" என்ற தொடரும்,

"கண்ணைத் தொடக்கிற மாதிரி நடந்ததையும் தொடைச்சிட்டுப்போ" என்ற தொடரும் வாழ்க்கையில் நடக்கும் நிகழ்வுகளை எப்படி எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற ஆழமான செய்தியை அழகாக எடுத்துரைக்கின்றது. ரவுண்ட் பாசஞ்சர், ஆட்டோ ஆகிய ஆங்கிலச் சொற்கள் இடம்பெற்றுள்ளது. இது இன்றைய மொழிநடையாகிவிட்டது.

<u>முடிவுரை:</u>

சேலத்தார் வண்டி மிக அருமையாக அமைந்துள்ளது. சேலத்தார் பாலாமீது கொண்டிருந்த பாசமும் அன்பும் கதையில் வெளிப்படுகிறது. அதேசமயம் கால மாற்றத்தால் மாட்டு வண்டி வைத்திருப்போர் நிலை மிக எளிமையாகக் குறைவான பாத்திரப் படைப்புகளுடன் மிகச்சிறப்பாக இக்கதை படைக்கப்பட்டுள்ளது.

19. சேலத்தார் பண்புநலன்கள் பற்றி எழுதுக.

<u>முன்னுரை:</u>

சேலத்தார் வண்டி சிறுகதையில் முதன்மைப் பாத்திரங்களுள் ஒருவராகத் திகழ்பவர் சேலத்தார். இவரது பெயர் என்ன என்பது பற்றிக் கதையில் கூறப்படவில்லை. நீண்ட நாட்களுக்கு முன் சேலத்திலிருந்து வந்த இவரது முன்னோர்கள் வளவனூரிலேயே தங்கிவிட்டார்கள். எனவே இவர் சேலத்தார் என்றே அழைக்கப்பெறுகிறார். அவரது பண்புநலன்கள் பற்றிக் கீழே காணலாம்.

<u>தொழிலை நேசித்தவர்:</u>

இவர் மாட்டு வண்டி வைத்திருந்த காலத்தில் இரயில்நிலையம் செல்வோரும் அங்கிருந்து வருவோரும் இவரது வண்டியைப் பயன்படுத்தவே விரும்புகிறார்கள். ஒவ்வொரு ரயிலுக்கும் உரிய சரியான நேரத்தில் சேலத்தார் வண்டி தயாராக நிற்கும். இவரது வண்டிக்குப் பக்கத்தில் மண்ணாங்கட்டி என்பவரது வண்டி நிற்கும். ஆனாலும் அதில் யாரும் ஏறமாட்டார்கள். சேலத்தார் வண்டி சவாரி போய்விட்டு வரும் வரைக்கும்கூட சிலர் காத்திருப்பதுண்டு. பயணிகளிடம் பக்குவமாகப் பேசுவது, அவர்கள்மீது அக்கறை கொள்வது ஆகிய பண்புகளால் சேலத்தாரை அனைவரும் விரும்பினர். மாட்டுவண்டித் தொழிலை அவர் மிகவும் நேசித்தார். அதனால்தான் மாட்டுவண்டி ஓடாத காலத்தில்கூட அதைத் தன் பக்கத்திலேயே வைத்துள்ளார். பாலாவிடம் அதை உடைக்க மனமில்லை என்று வேதனையோடு கூறிகிறார்.

<u>பாலாவின் படிப்பிலும் அக்கறை:</u>

சேலத்தார் மகன் வேணு நன்றாகப் படிப்பவன். பாலா சேலத்தாரைக் கூப்பிட அவர் வீட்டுக்குச் சென்றபோதுதான் வேணுவைச் சந்தித்தான். அதன்பின் சேலத்தாரிடம் நெருங்கிப் பழகினான். பள்ளியிலே படிக்கின்ற காலத்தில் பாலா இரயில் நிலையத்திற்குச் சென்று ரயில் வரும்வரை சேலத்தாரிடம் பேசிக் கொண்டிருப்பான். சேலத்தார் பாலாவுக்கு இராமாயணம், மகாபாரதம் பற்றியெல்லாம் சொல்லிக் கொடுப்பார். அடிக்கடி தாத்தாவிற்காக பாலா, சேலத்தார் வண்டியை அழைக்கப்போவதுண்டு. அதனால் இருவரும் நெருங்கிப் பழகினார்கள். சேலத்தார்,

பாலாவைப் பார்த்து “நீயும் என் பிள்ளை மாதிரி, நீ இன்னும் நல்லா படிக்கனும்” என்று அறிவுரை கூறுவார். பாலாவுக்கு அவருடன் பேசிக் கொண்டிருந்தால் நேரம் போவதே தெரியாது.

உபசரிப்பின் உன்னதம்:

பிற்காலத்தில் பாலாவிற்கு, சீர்காழியில் திருமணம் நடந்தது. சேலத்தாரால் பாலாவின் திருமணத்திற்குச் செல்ல இயலவில்லை. ஒரு நாள் பாலாவும் அவரது மனைவியும் இரயிலில் வளவனூர் வந்திற்கியபோது அவர்களது பெட்டி படுக்கைகளைத் தூக்கி வண்டியில் ஏற்றினார். வேண்டாம் என்று பாலா தடுத்தபோதும் கேட்கவில்லை. பாலாவின் மனைவியைப் பார்த்து “வலது காலை வைத்து ஏறு தாயி” என்று கூறித் தன் வண்டியில் ஏறச் சொன்னவர், “இன்னும் பார்த்த பாலாவின் தந்தை “குழந்தை பிறந்தா பாலா உங்கள் பெயரைத்தான் வைப்பான்” என்று சேலத்தாரிடம் கூறினார். “பொண்ணு மாப்பிள்ளை என் வண்டியில் ஊர்கோலம் போறாங்கல்ல” என்று கூறி மகிழ்ந்தார். சேலத்தாரின் உன்னதமான அன்பு கதை முழுவதும் விரவிக் கிடந்தது.

அறிவுரை கூறும் அழகு:

பாலாவின் மனைவிக்குத் திருமணமான உடனே தரித்த கரு கலைந்துவிட்டது. விழுப்புரம் பண்டரிபாய் ஆஸ்பத்திரியில்தான் அவளைச் சேர்த்திருந்தார்கள். மயக்க நிலையிலிருந்த அவளைத் தேற்றி பாலா வளவனூருக்கு இரயிலில் அழைத்து வந்தான். கைத்தாங்கலாக பாலா அவளை அழைத்துவந்தபோது அவள் சேலத்தாரைப் பார்த்ததும் புடவைத் தலைப்பை வாயில் திணித்துக் கொண்டு விம்ம ஆரம்பித்தாள். அப்போது சேலத்தார், வீட்டுக்கு வருகிற பெண்கள் கண்கலங்கக் கூடாது என்றும் அடுத்த வருடம் பேரன் வந்திடுவான் என்றும், கண்ணீர் வரும்போது கண்ணைத் துடைக்கிற மாதிரி வாழ்வில் நடந்த துன்பங்களையும் துடைத்துவிட வேண்டும் என்று அழகாக அறிவுரை கூறுகிறார்.

கனவை நனவாக்கியவர்:

சேலத்தார் மகன் வேணு நன்றாகப் படிப்பான். அவனை நன்றாகப் படிக்க வைத்து, இஞ்சினியர் ஆக்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டேயிருப்பார். அதேபோல் வேணு தன் தந்தை விரும்பியதுபோல் மாயவரத்தில் இஞ்சினியராக வேலை பார்க்கிறான். ஒவ்வொரு சனி ஞாயிறும் வளவனூர் வந்துவிடுவான். அவனுக்கு இரண்டு பிள்ளைகள் உள்ளனர். வேணு தன்னை அழைப்பதாகவும் முடிந்தவரை வளவனூரில் இருக்க விரும்புவதாகவும் பாலாவிடம் கூறுகிறார். வேணுவை இஞ்சினியர் ஆக்க வேண்டும் என்ற அவரது கனவு நிறைவேறியது.

பாசமிகு பண்பாளர்:

பாலாவின் குழந்தையைப் பார்த்த சேலத்தார் மிகுந்த மகிழ்ச்சியடைந்தார். வாடா மொட்டைப் பேராண்டி என்று கையில் வாங்கிக் கொண்டார். குழந்தையும் முன்பே தெரிந்தவன்போல் அவரிடம் போய்விட்டான். குழந்தையின் தலையைத் தடவியவர் சந்தனம் போதாதப்பா, இன்னும் நிறையத் தடவ வேண்டும் என்று அக்கறையோடு கூறினார். மேலும் தன் இடுப்பில் சொருகியிருந்த நான்காய் மடித்து வைக்கப்பட்டிருந்த பத்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்துக் குழந்தை கையில் கொடுத்தவர் குழந்தையைக் கையில் வாங்கித் தன் வண்டிக்கருகில் சென்றவர், இது உன் அப்பாவின் தாத்தா, உன்

அம்மா, அப்பா ஏறிய வண்டி, இப்போது நீயும் உட்கார்ந்திருக்கின்ற வண்டி என்று கூறிப் பாசமிகுதியால் கண்களில் கண்ணீர் வரச் சிரித்தார்.

முடிவுரை:

சேலத்தார், பயணிகளை ஏற்றிச் செல்லும் சாதாரண வண்டிக்காரராக இருந்தாலும் நல்ல பண்பாளராக, அனைத்தும் அறிந்தவராக, கல்வியின் முக்கியத்துவம் உணர்ந்தவராக, ஆறுதல் கூறும் அன்புடையவராகத் திகழ்கிறார்.

20. பெயர்ச்சொல், வினைச்சொல் அறிதல்:

பெயர்ச்சொல்:

ஒன்றைக் குறிப்பதற்காகவோ, அழைப்பதற்காகவோ வைக்கப்படும் பொதுவான சொல் பெயர்ச்சொல் எனப்படும். இது பொருளின் பெயரைக் குறிக்கும்.

| | | |
|---|---|---|
| பொருட்பெயர் | - | காகிதம், சட்டை, மனிதன், விமலா |
| இடப்பெயர் | - | வீடு, கோயில், பள்ளி, அலுவலகம் |
| காலப்பெயர் | - | காலை, சித்திரை, திங்கள் |
| சினைப்பெயர் | - | கை, கால், தலை, பூ, தண்டு |
| பண்புப் பெயர் | - | வட்டம், செம்மை, மகிழ்ச்சி, நீளம், உவர்ப்பு |
| தொழிற் பெயர் | - | படிப்பு, நடிப்பு, வரைதல் |

பெயர்ச்சொற்களின் பண்புகள்:

1) வேற்றுமை உறுபுகளை ஏற்கும்
புத்தகத்தை - புத்தகம் + ஐ
2) பெயரடைகளை ஏற்கும்
நல்ல பையன் (நல்ல, சிறிய, புதிய, சிறந்த, பெரிய)
3) எண் அட்டைகளையும், சுட்டுவினா அடைகளையும் ஏற்கும்
ஒரு குரங்கு, பல கோயில்கள்
அந்த மனிதன், எந்தக் குளம்?
4) ஆக, ஆகி என்னும் விகுதிகளைப் பெற்று வினையடையாகச் செயல்படும்
புனிதமாக, நிலமாக, பொருளாகி
5) 'தல்' விகுதி பெற்ற தொழிற்பெயரும், காலங்காட்டும் தொழிற்பெயரும், வினையாலணையும் பெயரடைகள், எண் அடைகள், வினா அடைகள் இவற்றை ஏற்பதில்லை. மேலும் ஆகி ஆக என்னும் விகுதிகளையும் ஏற்பதில்லை.
போதல், செய்தல், ஓடித்தல்
போனது, போகிறது, போவது
வந்தவர், செய்யாதவர், செய்தவர்
6) தன்மை, முன்னிலை, படர்க்கை, மூவிடப் பொதுப்பெயர்கள், சுட்டுப்பெயர்கள், வினாப்பெயர்கள், பால்பொதுப் பெயர்கள், திணைப் பொதுப்பெயர்கள், முறைப்பெயர்கள், ஆகுபெயர்கள் இவை அனைத்தும் பெயர்ச் சொல் வகையிலேயே அடங்கும்.

<u>வினைச்சொல்:</u>

வினை என்பதற்குச் செயல் என்பது பொருள் பொருளின் வினையை உணர்த்துவது வினையை உணர்த்துவது வினைச்சால் எனப்படும். இதற்குக் காலக்கிளவி எனும் பெயரும் உண்டு. வினைப்பகுதி எப்பொழுதுமே கட்டளையிடுவதுபோல் இருக்கும்.

ஓடு, ஆடு, பார், வா, நில்

காலத்தைத் தெளிவாகக் காட்டினால் அது தெரிநிலை வினை எனப்படும். தெரிநிலை வினைச்சொல் கருத்தா, கருவி, நிலம், செயல் காலம் எனப்பல பொருள்களை உணர்த்தும்.

சான்று : நடந்தான்

| | | |
|---|---|---|
| காலம் | - | இறந்தகாலம் |
| திணை | - | உயர்திணை |
| பால் | - | ஆண்பால் |
| செயல் | - | நடந்தது |
| கருவி | - | பாதம் |

காலத்தைக் குறிப்பாகக் காட்டினால் அது குறிப்புவினை எனப்படும்.

அவன் நல்லவன்:

நல்லவன் அவன் என்பது நன்மை என்னும் பண்புச்சொல்லடியாகப் பிறந்ததால் குறிப்பு வினைமுற்று.

| | | |
|---|---|---|
| பொன்னன் | - | பொருள் |
| ஆரூரன் | - | இடம் |
| ஆதிரையான் | - | காலம் |
| கண்ணன் | - | சினை |
| கரியன் | - | குணம் |
| நடையன் | - | தொழில் |

21. <u>ண - ன - ந, ல - ள - ழ, ர - ற வேறுபாடு அறிதல்:</u>

ர - ற : ரகற, றகரங்கள்

ரகரம் - ர - இடையின ரகரம் (சிறிய ரகரம்)

றகரம் - ற - வல்லின றகரம் (பெரிய றகரம்)

- மேல்வாயை (அண்ணத்தின் முன் வளைவை) நுனி நாக்கு வருடுவதால் (தடவுவதால் 'ர' பிறக்கும். - வருடொலி)
- மேல்வாயை நுனிநாக்கு நன்றாக அழுத்தம் பொருந்தி சட்டென விடுவதால் (தடித்து வருடுவதால்) 'ற' பிறக்கும் (உரைப்பொலி / அடைப்பொலி)
- ரகரமும், றகரமும் மெய்யெழுத்தாகவும் உயிர் மெய்யெழுத்தாகவும் சொல்லுக்கு இடையிலும் ஈற்றிலும் வருகின்றன.

| | | | |
|---|---|---|---|
| உரை | குரவன் | கற்று | தற்காலம் |
| எரி | துரத்தல் | குன்று | நின்று |

- சொல்லின் இடையே றகரத்தை அடுத்து இன்னொரு மெய் வரலாகாது.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கற்க்க | - | தவறு | கற்க | - | சரி |
| பொற்க்குடம் | - | தவறு | பொற்குடம் | - | சரி |
| நிற்க்க | - | தவறு | நிற்க | - | சரி |
| விற்க்கப்படும் | - | தவறு | விற்கப்படும் | - | சரி |

- ♥ ரகரமும் றகரமும் சொல்லின் முதலெழுத்தாக வாரா. அப்படி பிற மொழிச் சொற்களை எழுத நேர்ந்தால் முதலெழுத்தாக அ அல்லது இ அல்லது உ என்ற ஒன்றைச் சேர்த்து எழுதுவது மரபு.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ராகம் | - இராகம் | ரசம் | - | இரசம் | ரோமம் | - | உரோமம் |
| ராமன் | - இராமன் | ரங்கம் | - | அரங்கம் | ரத்தினம் | - | இரத்தினம் |
| ரம்பை | - அரம்பை | றாத்தல் | - | இறாத்தல். | | | |

**22. ர, ற வேறுபாடுகள்:**

| | | | |
|---|---|---|---|
| அரம் | - | ஒரு கருவி | அரத்தை எடு |
| அறம் | - | தருமம், ஈகை | அறத்துப்பால் |
| அரன் | - | சிவன் | அரவிந்தன் |
| அறன் | - | அறம் | அறவொழுக்கம் |
| அரு | - | அரிய, அணு | அருமையான பேச்சு |
| அறு | - | துண்டி, வட்டு | மரம் அறு |
| அரி | - | வெட்டு, சிங்கம், திருமால் | அரியும் சிவனும் ஒன்று |
| அறி | - | தெரிந்து கொள் | அறிவொளி |
| அரிவை | - | பெண் (20-25) | அரிவை அழகு |
| அறிவை | - | ஆறு அறிவு | மனிதனுக்கு ஆற்றவு |
| ஆர | - | நிறைய | வயிறார உண் |
| ஆற | - | குணமாக | புண் ஆறி வருகிறது |
| இரு | - | உட்கார், இருக்கை | தங்கியிரு |
| இறு | - | ஆற, வடி | நீரை இறுத்தெடு |
| இரும்பு | - | ஓர் உலோகம் | இரும்புக் கம்பி |
| இறும்பு | - | சரிவு, தாழ்வுநிலை | சாலை இறக்கம் |
| ஈரு | - | தலைப்பேன் | ஈரும் பேனும் |
| ஈறு | - | இறுதி, கடைசி | ஈற்றடி |
| உரவு | - | வலிமை | உரவுடையான் |
| உறவு | - | சொந்தம், சேர்க்கை | உறவு முறை |
| உரி | - | உரித்தல், அரைப்படி | தோலை உரி |
| உறி | - | தொங்கவிடும் உறி | உறியில் பார் |
| உரை | - | தேய், சொல், பொருள் கூறு | உரைநடை நூல் |
| உறை | - | இடம், இருப்பிடம், மூடி | தலையனை உறை |
| எரி | - | நெருப்பு, சினம் | எரிதழல் கொண்டு வா |
| எறி | - | மேலே போய் | ஏறிவா |
| ஒரு | - | ஒன்று | ஒரு நாள் |
| ஒறு | - | தண்டி, அடக்கு | ஒருத்தவன் |
| கர | - | ஒளித்துவை, திருடு | நெஞ்சக் கரவு |
| கற | - | பீச்சி எடுத்தல் | பால் கறவை |

## 23. ல - ள - ழ : லகர, ளகர, ழகரங்கள்:

லகர, ளகர, ழகரங்கள் பொருட் சிறப்பையும் சொல்லினிமையையும் தரத்தக்கன. இவற்றை உச்சிரிப்பதற்குச் சிலர் சிரமப்படுகின்றனர். ழகரத்தை ளகரமாகவே உச்சரிக்கின்றனர். போதிய முயற்சியும் பயிற்சியும் இருந்தால் லகர, ளகர, ழகர வேறுபாடுகள் நமக்குக் காயாகப் புளிக்காது. கனியாகச் சுவைக்கும்.

ழகர, லகர, ளகரங்கள்:

ழ - ழகரம் (சிறப்பு ழகரம்)
ல - நுனி நா லகரம் (றகர லகரம்)
ள - மடி நா ளகரம் (டகர ளகரம்)

மேல்வாயை நாக்கின் நுனி தடவுவதால் 'ழ' பிறக்கிறது கழுகு, பழம், வாழ்க, தாழ்ச்சி, வழி.

லகரம் புணர்ச்சியில் 'ற' கரமாக மாறும். எனவே லகரம் றகரலகரம் எனப்படுகிறது.

பல்பொடி - பற்பொடி
கல்கண்டு - கற்கண்டு
கல் க - கற்க

ளகரம் புண்ர்ச்சியில் 'ட' கரமாக மாறும். எனவே ளகரம் டகர ளகரம் எனப்படுகிறது.

முள் தாள் - முட்டாள்
வாள் தொழில் - வாட்டொழில்

லகர, ளகர, ழகர வேறுபாடுகள்:

| | | |
|---|---|---|
| அகல் | விளக்கு | அகல்விளக்கு |
| அகழ் | தோண்டு | அகழ்வாய்வு |
| அல்லி | நீர்வாழ் தாவரம் | அல்லி மலர்ந்தது |
| அள்ளி | வாரி | அள்ளி அணைத்தான் |
| அலறு | கதறு | அலறி அடித்து |
| அளறு | நரகம், சேறு | |
| அலம் | கலப்பை, சஞ்சலம் | கை அலம்புமிடம் |
| அளம் | கூர்மை, களர்நிலம் | உப்பளம் |
| ஆலை | தொழிற்கூடம் | அரிசி ஆலை |
| ஆளை நபரை | ஆள்பார்த்து | |
| ஆலி | ஏலி, மழைத்துளி, கலி | ஆலிங்கனம் |
| ஆளி | சிங்கம், ஆளுபவன், யாளி | உழைப்பாளி |
| ஆழி | கடல், மோதிரம், சக்கரம் | ஆழிப்பேரலை |
| ஆல் | ஆலமரம் | ஆலும், வேலும் |
| ஆள் | ஓர் ஆள் | அந்த ஆள் |
| ஆழ் | மூழ்கு அமுக்கு | ஆழ் துளைக் கிணறு |
| இலை | பச்சை இலை, தழை | பச்சிலை |
| இளை | மெலிந்து போ | இளைத்து விட்டான் |
| இழை | நூல் | பட்டு இழை |

| | | |
|---|---|---|
| இலக்கம் | எண் | மூன்று இலக்க எண் |
| இளக்கம் | இளகச்செய்தல் | மனம் இளகியது |
| உலை | உலை, நீரலை, கொல்லன் | உலை உலைக்களம் |
| உளை | சேறு, பிடரிமயிர் | உளையில் மாட்டிக்கொள்ளாதே |

**ள - ண - ந: னகர, ணகர, நகரங்கள்:**

எழுதும் போது பலருக்கும் மிகுதியான பிழைகள் ஏற்படுவது இந்த னகர, ணகர, நகர எழுத்துக்களின் தான். உரிய இலக்கணங்களையும், சரியான உச்சரிப்பு முறைகளையும் பிழையறக் கற்றறிந்தால் மேற்கண்ட வேறுபாடுகள் நமக்கு ஒரு பொருட்டே அல்ல.

**னகர, ணகர, நகரங்கள்:**

| | | |
|---|---|---|
| ன | - | றன்னகரம் (றகர னகரம்) |
| ண | - | டண்ணகரம் (டகர ணகரம்) |
| ந | - | தந்நகரம் |

| | | | |
|---|---|---|---|
| கன்னி | எனக்கு | தன்னலம் | சொன்னவர் |
| கண்ணி | கணக்கு | வண்டு | குண்டு |
| நரி | நலம் | நாய் | நாக்கு |
| நகை | நாடு | நான்கு | நன்னூல் |

**னகர, ணகர, நகர வேறுபாடுகள்:**

| | | |
|---|---|---|
| அனு | தனிமை, தாடை | அனுபோகம் |
| அணு | நுண்மை | அணுக்குண்டு |
| அனை | அத்தனை | அனைய செயல்கள் |
| அணை | கலை, அணைத்தல் | தலையணை |
| அன்னம் | பறவை, சோறு | அன்னமிட்டகை |
| அண்ணம் | மேல்வாய் | அண்ணத்தை வருட |

**24. கலைச்சொல்லாக்கம்**

| | | |
|---|---|---|
| Internet | - | இணையம் |
| Website | - | இணையதளம் |
| E-mail | - | மின்னஞ்சல் |
| Online | - | இணையவழி |
| What`s app | - | புலனம் |
| Media | - | ஊடகம் |
| Revoke | - | திரும்பப்பெறு |
| Feedback | - | பின்னுட்டம் |
| Gudideline | - | வழிமுறைகள் |
| Editor | - | இதழியல் |
| Faircopy | - | செவ்வைப்படி |

| | | |
|---|---|---|
| **Current file** | - | **நடப்புக் கோப்பு** |
| **Draftsmand** | - | **வரைபட வரைவாளர்** |
| **Commissioner** | - | **ஆணைப்படி** |
| **Law and order** | - | **சட்டம் ஒழுங்கு** |
| **Enquiry** | - | **உசாவல்** |
| **Indian penal code** | - | **இந்தியத் தண்டனைச் சட்டம்** |
| **Last pay certificate** | - | **முன் ஊதியச் சான்று** |
| **Plastic** | - | **நெகிழி** |
| **Scanner** | - | **வருடி** |

**25. பிறமொழிச் சொல் நீக்கித் தமிழ்ச்சொல் அறிதல்:**

| **அயற்சொல் (வடசொல்)** | | **தமிழ்ச்சொல்** |
|---|---|---|
| **அகங்காரம்** | - | **செருக்கு, இறுமாப்பு** |
| **அகதி** | - | **ஆதரவற்றவர், புகலி** |
| **அகங்பாவம்** | - | **தற்பெருமை** |
| **அகராதி** | - | **குறும்பு** |
| **அக்கப்போர்** | - | **வீண்பேச்சு** |
| **அங்கீகாரம்** | - | **உறுப்பினர்** |
| **அங்குலம்** | - | **ஒப்புதல்** |
| **அஞ்சுகம்** | - | **கிளி** |
| **ஆகமம்** | - | **முதல் நூல்** |
| **ஆகாயம்** | - | **வானம்** |
| **ஆசனம்** | - | **இருக்கை** |
| **ஆச்சர்யம்** | - | **வியப்பு** |
| **ஆடம்பரம்** | - | **பகட்டு** |
| **ஆத்மா** | - | **உயிர்** |
| **ஆதி** | - | **அருவருப்பு** |
| **ஆனந்தம்** | - | **வாழ்நாள்** |
| **இரகசியம்** | - | **மறைபொருள்** |
| **இரணம்** | - | **புண்** |
| **இரத்தம்** | - | **குருதி** |
| **இராசா** | - | **மன்னன், அரசன்** |
| **இராத்திரி** | - | **இரவு** |
| **இராணுவம்** | - | **போர்ப்படை** |
| **ஈசானம்** | - | **வடகிழக்கு** |
| **ஈனம்** | - | **குறைபாடு, இழிவு** |
| **ஈஸ்வரன்** | - | **இறைவன்** |
| **உக்கிரம்** | - | **கடுமை** |
| **உச்சரித்தல்** | - | **பலுக்கல், எழுத்தோசை, ஒலித்தல்** |
| **உச்சி** | - | **முகடு, தலை, முதன்மை** |
| **உபகரணம்** | - | **கருவிப்பொருள்** |

| | | |
|---|---|---|
| உபசாரம் | - | பணிவிடை |
| உபயோகம் | - | பயன் |
| உபந்யாசம் | - | சொற்பொழிவு |
| ஊகம் | - | கருதல், ஓர்தல், கருங்குரங்கு, உட்பொருளாதல் |
| எசமான் | - | தலைவன் |
| ஏகாதசி | - | பதினோராம் பிறை |
| ஐக்கியம் | - | ஒற்றுமை |
| ஐதிகம் | - | நம்பிக்கை |

## 26. ஆசிரியர் வரலாறுகள்:

### 1. பாரதியார்

அடிமைத் தலையில் சிக்குண்டு உறங்கிக் கிடந்த தமிழகத்தைத் தம் பாட்டு திறத்தால் எழுப்பி எழுச்சியுறச் செய்தவர் மகாகவிபாரதியார்.

சுப்பிரமணிய பாரதியார் 11.12.1882 இல் எட்டையபுரத்தில் சின்னசாமி அய்யருக்கும், இலக்குமியம்மையார்க்கும் மகனாகப் பிறந்தார். நெல்லை இந்துக் கல்லூரியில் பயின்ற இவர், பதினோராம் வயதிலேயே சமஸ்தானப் புலவர்களால் பாரதி என்னும் பட்டம் சூட்டப்பெற்றவர். செல்லம்மாள் இவர்தம் துணைவி ஆவார்.

சுதந்திர வேட்கையினைப் பாரதத்திலும், குறிப்பாகத் தமிழகத்திலும் ஊட்டியவர் பாரதியார். இவருடைய சோதிமிக்க நவகவிதைகள் சுவை புதிது, பொருள் புதிது, வளம் புதிது, சொல் புதிது என்று திகழ்பவையாகும்.

பாரதியாரின் கண்ணன்பாட்டு இறையுணர்வோடு காதலுணர்வையும் சுட்டுவன. பாஞ்சாலி சபதம் அறத்தின் வெற்றியையும், பெண்ணினத்தின் சீர்மையை விளக்குவதாகும். குயில்பாட்டு இயற்கையின் பேரெழிலை விளக்குவதோடு தத்துவக் கருத்துகளையும் எடுத்தியம்புவதாகும்.

பாரதியார் வருவதுணரும் பேரறிவாளர்; 19ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்த அவர், இன்றைய அறிவியல் வளர்ச்சியினை அன்றே இயம்பினார்.

உலக உயிர்களிலெல்லாம் இறைவனைக் கண்ட பாரதியார், சாதி சமய வழக்குகளை வெறுத்தவர். பாரதிப்பெருமகனார் 12.09.1921ல் இயற்கை எய்தினார்.

“அறிவே தெய்வம்” என்றும் “சுத்த அறிவே சிவம்” என்றும் போற்றிய பாரதியார் தமிழ் வாழும்வரை வாழ்வார்.

பாரதியார் கவிதைகளில் “பாரத ஜனங்களின் தற்கால நிலை” என்னும் தலைப்பில் அமைந்த பாடல் பாடப்பகுதியாகும்.

### 2. பாரதிதாசன்

தமிழுக்கும் அமுதென்று பேர் எனக் கவிதை யாத்து தூங்கிய தமிழரைத் தட்டி எழுப்பியவர் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார்.

இவர் 29.4.1891-இல் புதுவையில் திரு. கனகசபை - இலக்குமி அம்மையாருக்கு மகனாய் பிறந்தார். 1908-இல் காரைக்காலில் ஆசிரியப் பணியில் சேர்ந்தார். இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழிலும் வித்தகராய் விளங்கினார்.

பெருங்கவிஞர் பாரதியாரின் மாணவரானார். ஸ்ரீ.சுப்பிரமணிய பாரதியின் கவிதா மண்டலத்தைச் சார்ந்த கனக சுப்புரத்தினம் என்னும் பெரும் பேறுபெற்றார். இவர் எழுதிய முதற்கவிதை 'எங்கெங்குக் காணினும் சக்தியடா' எனத் தொடங்கும் கவிதையாகும்.

பாரதிதாசன் கவிதைகள் நான்கு தொகுதிகளாக வெளிவந்துள்ளன. குடும்ப விளக்கு. இருண்டவீடு, பாண்டியன் பரிசு, அழகின் சிரிப்பு, குறிஞ்சித்திட்டு, பிசிராந்தையார், இரணியன் அல்லது இணையற்ற வீரன் போன்ற பல நாடகங்களையும், சில சிறுகதைகளையும் எழுதியுள்ளார். 72 ஆண்டுகள் நிறைவாழ்வு வாழ்ந்த புரட்சிக் கவிஞர் பாவேந்தர் பாரதிதாசனார் 21.04.01964 அன்று இயற்கை எய்தினார்.

இங்கு பாரதிதாசன் கவிதைகளில் 'தமிழின் இனிமை', 'சங்கநாதம்' ஆகிய கவிதைகள் பாடமாக்கப்பட்டுள்ளது.

## 3. தேசிக விநாயகம் பிள்ளை

இவர் தேரூரில் சிவதாணுப் பிள்ளைக்கும் ஆதிலட்சுமி அம்மையாருக்கும் அருந்தவப்புதல்வராய் 1876ஆம் ஆண்டு ஆடி மாதம் 14-ம் நாளில் பிறந்தார்.
தேரூரில் தொடக்கக் கல்வியையும், திருவாவடுதுறை ஆதினம் வாணன் திட்டு மடம் சாந்தலிங்கத் தம்பிரானிடம் தமிழ்க் கல்வியையும் கற்றார். 1895-இல் அழகம்மை ஆசிரிய விருத்தம் என்ற தமது முதல் கவிதை நூலைப் படைத்தார். பின்னர் 1901இல் தொடக்கப்பள்ளி ஆசிரியராகத் தம் வாழ்வைத் தொடங்கினார்.

பாரதிதாசன் பாடல்களில் புயல் அடித்தால் இவருடைய கவிதைகளில் தென்றல் வீசும் என்பர். இவருடைய கவிதைகளில் மென்மையும், பெண்மையும் தவழும், நகைச்சுவையும் ததும்பும். வெண்பாவில் இவர் மிகச் சிறந்த கவிதைகளை இயற்றினார்.
கோட்டாறில் ஆங்கிலப் பள்ளியில் இவர் படித்ததால் ஆங்கில மொழியில் வெளிவந்த அறிஞர் எட்வின் ஆர்னால்ட் என்பவரின் LIGHT OF ASIA என்பதை 'ஆசிய ஜோதி' என்னும் நூலாகப் படைத்தார். பாரசீகக் கவிஞர் உமர்கய்யாம் பாடல்களை ஆங்கிலமொழி பெயர்ப்பிலிருந்து தமிழில் இனிய நடையில் அழகாகத் தழுவி எழுதியுள்ளார். இவரது பாடல்களில் முற்போக்கான சீர்திருத்தக் கருத்துக்கள் பொதிந்திருக்கும்.

இவர் படைத்த ஸ்ரீதேவியின் கீர்த்தனங்கள் (1956) என்னும் இசை நூலுக்கும் 'குழந்தைச் செல்வம்' (1957) என்னும் கவிதைத் தொகுதிக்கும் தமிழக அரசு பரிசுகளை வழங்கியுள்ளது.
மருமக்கள் வழி மான்மியம் (1917-18) காந்தளூர்ச்சாலை (1936) மலரும் மாலையும் (1938) ஆசியஜோதி (1941) இளந்தென்றல் (1941) நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழி மான்மியம் (1942) உமர்கய்யாம் (1945) போன்றன இவருடைய படைப்புகளில் குறிப்பிடத்தக்கனவாகும்.
1940 இல் கவிமணி பட்டம் பெற்ற இக்கவிஞர் 1954 ஆம் ஆண்டு செட்டம்பர் 26ஆம் நாள் மறைந்தார்.

இவருடைய 'மலரும் மாலையும்' என்ற நூலில் உள்ள 'கோவில் வழிபாடு' என்னும் பாடல் இங்குப் பாடப்பகுதியாக அமைந்துள்ளது.

## 4. சுரதா

இவர் தஞ்சை மாவட்டம், பழையனூரில் திருவேங்கடம், சண்பகம் தம்பதியருக்கு 23.11.1921 இல் மகனாகப் பிறந்தார். இவரது இயற்பெயர் இராஜகோபால், பாவேந்தர் மீது கொண்ட பற்றின் காரணமாக அவரது இயற்பெயரான கனகசுப்புரத்தினம் என்பதில் சுப்புரத்தினம் என்னும் பெயருடன் தாச்ன என்ற பெயரையும் சேர்த்துத் தம்மைச்

சுப்புரத்தினதாசன் என்று அழைத்துக் கொண்டார். பின்னாளில் அப்பெயரை இலக்கிய உலகில் சுரதா என்று நிலைத்தது.

'தேன்மழை' துறைமுகம் ஆகியன் இவருடைய படைப்புகளுள் குறிப்பிடத்தக்கவாகும்.

"தடைநடையே அவர் எழுத்தில் இல்லை ............ வாழைத்
தண்டுக்கா தடுக்கின்ற கணுக்கள் உண்டு"
"படுத்திருக்கும் வினாக்குறிபோல் மீச் வைத்த பாண்டியர்கள்"

என்னும் இவரது கவிதை அடிகளில் உவமைகள் ஒளிரும் இதனால் இவரை உவமைக்கவிஞர் என்று கவிஞர்கள் பாராட்டுவர்.

தேன்மழை என்ற நூலுக்குத்தமிழ் வளர்ச்சிக் கழகம் பரிசு அளித்தது. 1978-ஆம் ஆண்டு 'பாவேந்தர்' விருதினைப் பெற்று அதனை முதன்முதலில் பெற்றவர் என்ற பெருமைக்கு உரியவரானார். தமிழக இயல் இசை நாடக மன்றம் இவருக்குக் 'கலைமாமணி' என்ற பட்டத்தினை வழிங்கியது.

"இலக்கியம் சார்ந்த பேச்சும், பழைய நூல்களைத் தேடித் தேடி வாங்கிச் சேர்ப்பதும்", இவருக்கு மிகவும் பிடித்தமானவையாகும்.

இங்குப் பாடப்பகுதியாக அமைந்துள்ள 'தலைமை தாங்கும் தமிழ்' 'நெஞ்சில் நிறுத்துங்கள்' எனும் கவிதைகள் பாடமாக்கப்பட்டுள்ளன.

## 5. அப்துல் ரகுமான்.

கவிக்கோ என்ற சிறப்புப் பட்டப்பெயருக்குரியவர். கவியரக்கத் தனிக் கவிஞர். புதுக்கவிதையில் புதிய வார்த்தைகளை வார்ப்பதில் வல்லவர். சிலேடையாகக் கவிதை தந்து சிரிக்கவும், சிந்திக்கவும் செய்பவர். படிமக் கவிஞர் பால்வீதி, நேயர் விருப்பம், மரணம் முற்றுப்புள்ள அல்ல போன்றவை கவிக்கோவின் படைப்புகள். இதழ்களின் வழி படைப்புகளைத் தந்தவர் கொண்டிருப்பவர். கண்ணதாசனால் தமிழ்நாட்டு கலீல் ஜிப்ரான் எனப்பாராட்டப் பெற்றவர்.

2015-ம் ஆண்உ தினமணி இதழ் கலாம் சிறப்பு மலர் ஒன்றை வெளியிட்டது. அவ்விதழில், 'கவிதைகளில் கலாம்' என்ற பகுதியில் பல கவிஞர்கள் அப்துல்கலாமைப் பற்றிக் கவிதை எழுதினர். கவிக்கோ அப்துல்ரகுமான் 'கனவு நாயகன்' என்னும் தலைப்பிட்டு அப்துல்கலாமைப் பற்றி தினமணியில் எழுதிய கவிதை பாராட்டுதலுக்குரியது.

கவிக்கோ அவர்கள் ஆலாபனை என்னும் மொழிபெயர்ப்புக் கவிதைத் தொகுப்பிற்காக 1999இல் சாகித்ய அகாதமி பரிசு பெற்றார். அவர் எழுதிய ஆலாபனை என்னும் கவிதை நூலிலிருந்து 'ஆறாவது அறிவு' என்னும் தலைப்பில் அமைந்த கவிதை நம் பாடப்பகுதியாக வந்துள்ளது.

## 6. மு.மேத்தா

பாவேந்தர் விருதுபெற்ற மு.மேத்தா அவர்கள் மதுரை மாவட்டத்துப் பெரிய குளத்தில் பிறந்தவர். வானம்பாடிக் கவிஞர் வரிசையில் தனக்கென்று ஓர் இடத்தைத் தக்க வைத்துக் கொண்டவர். கவிஞர் மு.மேத்தா மாநிலக் கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர். கவிதை சிறுகதை, புதினம் கட்டுரை என நியைப் பாடைப்புகளைப் படைத்துள்ளார். புதுக்கவிதைகளைப் பாடியுள்ளார்.

ஊர்வலம் என்ற நூலினுக்கு தமிழக அரசின் முதற்பரிசு கிடைத்துள்ளது. சோழநிலா என்ற புதினம் பரிசு பெற்ற சரித்திர நாவலாகும். மு.மேத்தாவின் கவிதைகளில் எளிமையும் எள்ளலும் எழுச்சியும் காணமுடிகின்றது. கவிஞர் எஸ்.அறிவுமதி மு.மேதாவைப்பற்றி

"மு.மேத்தாவின் காலம் கவிதைகளின் பொற்காலம் அவரது பேனாச் செங்கோல் தாழ்ந்ததே இல்லை. புதுக்கவிதைக் குதிரைகளைப் பூட்டி சாராட்டு ஓட்டிய ஒருவர்!" என்று குறிப்பிடுகிறார். இவரது 'ஊர்வலம்' என்கிற கவிதைத் தொகுப்பு தமிழக அரசின் பரிசு பெற்றுள்ளது. இவரது ஆகாயத்தில் அடுத்தவீடு சாகித்திய அகாடமி பரிசு பெற்றது. தனது கவிதைகள் மூலம் சமூகச் சிக்கல்களை வெளிப்படுத்துகின்றார். இவர் திரைப்படப் பாடல்களையும் எழுதியுள்ளார். இவருடைய கண்ணீர் பூக்கள் என்ற நூலில் 'தேசப்பிதாவுக்கு தெருப்பாடகனின் அஞ்சலி' என்னும் கவிதை அண்ணல் காந்தியடிகளைப் பற்றியது. இக்கவிதை இவரை உலகளவில் அடையாளப்படுத்தியுள்ளது.

## 7. கவிஞர் நா. தனராசன்

இவர் திருவாரூர் மாவட்டம், திருத்துறைப்பூண்டி வட்டம், வேப்பஞ்சேரி எனும் கிராமத்தில் நாராயணசாமி தேவர், வேதாம்பாள் தம்பதியினரின் மகனாக விவசாய குடும்பத்தில் பிறந்தார். அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் முதுகலை படிப்பில் தங்கப்பதக்கம் பெற்றவர். இவர் கல்லூரி பருவத்திலிருந்தே கவிதை எழுவதில் நாட்டம் கொண்டவராக விளங்கியவர். முப்பது ஆண்டுகளுக்கு மேல் தமிழ் பேராசிரியராகப் பணியாற்றி பேராவூரணி அரசுக் கல்லூரியின் முதல்வராகப் பணியாற்றி வருகிறார்.

பிரபஞ்சனின் புதினக்கலை, கண்மிட்டும் கலங்கள் பாடமறந்த கவிதை, அந்த கிராமத்து மனிதன் முதலான பத்துக்கும் மேற்பட்ட நூல்களை எழுதியவர். பல இலக்கிய அமைப்புகளின் பரிசுகளை பெற்றவர். இவரது "அந்த கிராமத்து மனிதன்" கவிதைத் தொகுப்பில் உள்ள கவிதை பாடமாக வைக்கப்பட்டுள்ளது.

## 8. கவிஞர் சுகிர்தராணி

தமிழ் கவிஞர் எழுத்தாளரும் இவர் வேலூர் மாவட்டத்தைச் சேர்ந்தவர். "கைப்பற்றி என் கனவுகோள்" "இரவு மிருகம்" "அவளை மொழிபெயர்த்தல்" தீண்டப்படாத முத்தம்" மற்றும் "காமத்திப்பூ" ஆகிய கவிதை நூல்களை இயற்றியுள்ளார். தற்போது இராணிப்பேட்டை அரசு பெண்கள் மேல்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராக பணியாற்றி வருகின்றார்.

தமிழாசிரியராக, கவிஞராக, பெண்ணுரிமை, சமூக சமத்துவ விடுதலை தளத்தில் களச்செயற்பாட்டாளராகவுள்ள இவருக்கு "சுந்தர ராமசாமி விருது" புதுமைப் பித்தன் நினைவு விருது, பெண்ணியச் சாதனையாளர், விருது உள்ளிட்ட பல விருதுகள் வழங்கப்பட்டுள்ளன.

இவரது கவிதைகள் அதன் மொழிக்காகவோ, அழகியலுக்காகவோ அல்லாமல், அதன் உள்ளோடும் பெண் விடுதலை, சமத்துத்திற்காகவே பெரிதும் அறியப்பட்டவை.

## 9. மாலதி மைத்ரி

புதுச்சேரி மாநிலத்தைச் சேர்ந்த மாலதி மைத்ரி 1968ல் பிறந்தார். ஒரு தமிழ்க் கவிஞர் எழுத்தாளர் பெண்ணியத்தை கருபொருளாகக் கொண்ட கவிதைகளுக்காக அறியப்பட்டவர் விளிம்பு நிலை அரசியல் மனித உரிமை அரசியல் செயல்பாடுகளில் தொடர்ந்து ஈடுபட்டவர்.

'அணங்கு' எனும் பெண்ணியப் பதிப்பகம் அணங்கின் பதிப்பாளர் சாரங்கபாணி (2001), நீரின்றி அமையாது உலகு (2003), நீலி (2005), எனது மதுக்குடவை (2012), முள்கம்பிகளால் கூடு பின்னும் பறவை (2017), கடல் ஒரு நீலச்சொல் (2019) என்பவை இவரது கவிதைத் தொகுதிகள்.

விடுதலையை எழுதுதல் (2004), நம் தந்தையரைக் கொல்வதெப்படி (2008), வெட்டவெளி சிறை (2014) என்பவை இவரது கட்டுரை நூல்கள். பறத்தல் அதன் சுதந்திரம் (2004) மற்றும் அணங்கு (2005) நூல்களின் தொகுப்பாசிரியர்.

## 10. ரா.பி. சேதுப்பிள்ளை (வாழ்க்கையும் வைராக்கியமும்)

தமிழ்நாட்டில் திருநெல்வேலியில் இராசவல்லிபுரம் என்ற ஊரில் 1896-ம் ஆண்டு மார்ச் திங்கள் 2-ம் நாள் பிறவிப்பெருமாள்பிள்ளை - சொர்ணம்மாள் ஆகியோருக்கு கார்காத்த வேளாளர் குலத்தில் சேது மகனாக பிறந்தார். சேதுக் கடலாடி இராமேசுவரத்திலுள்ள இறைவனைப் பூசித்ததனால் பிறந்த தம் மகனுக்கு சேது என்ற பெயர் சூட்டினர். இரா.பி.சேதுப்பிள்ளையின் முன்னெழுத்துக்களாக அமைந்த 'இரா' என்பது இராவல்லிபுரத்தையும் 'பி' என்பது 'பிறவிப்பெருமான் பிள்ளை' அவர்களையும் குறிப்பன.

இவர் எழுதிய முதல் கட்டுரை நூல் 'திருவள்ளுவர் நூல் நயம்' என்பதாகும். படைத்த உரைநடை நூல்களுள் தலைசிறந்ததாகவும், வாழ்க்கைப் பெருநூலாகவும் விளங்குவது. 'தமிழகம் ஊரும் பேரும்' என்பதாகும். இந்நூல் அவரின் முதிர்ந்த ஆராய்ச்சிப் பெருநூலாகவும் ஒப்பற்ற ஆராய்ச்சிக் கருவூலமாகவும் திகழ்கிறது.

அடுக்குமொழி, எதுகை, மோனை, இலக்கியத் தொடர் மூன்றையும் உரைநடைக்குள் கொண்டுவந்த சேதுப்பிள்ளையின் பேச்சாற்றலைப் பாராட்டித் தருமபுர ஆதினம் 1960-ஆம் ஆண்டு 'சொல்லின் செல்வர்' என்னும் விருது வழங்கியது. இவர் தமிழுக்கு ஆற்றியப் பணிகளுக்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் கால் நூற்றாண்டு காலம் பணியாற்றியதைப் பாராட்டி 'வெள்ளிவிழா' மற்றும் இலக்கியப் பேரறிஞர்' என்ற பட்டம் அளித்தும் சிறப்பித்தது. சேதுப்பிள்ளை ஏப்ரல் 25 1961-ல் தம் 65ஆம் வயதில் இறந்தார் இவருடைய நூல்கள் நாட்டுடைமையாக்கப்பட்டுள்ளன.

## 11. மயிலை சீனி வேங்கடசாமி (பழங்காலத்து அணிகலன்கள்)

வேங்கடசாமி சென்னையில் மயிலாப்பூர் பகுதியில் 1900 இல் பிறந்தார். அவரது தந்தை ஒரு சித்த மருத்துவர். வேங்கடசாமியின் மூத்த அண்ணன் தந்தையைப் போல சித்த மருத்துவரானார். இரண்டாவது அண்ணன் சீனி கோவிந்தராஜன் ஒரு தமிழறிஞர். திருக்குறள் காமத்துப் பால் நாட்கள், திருமயிலை நான் மணிமாலை ஆகிய படைப்புகள் எழுதியவர். வேங்கடசாமி கோவிந்தராஜனிடம் தமிழ் பயின்றார். பின் மகாவித்வான் சண்முகம் பிள்ளை, பண்டித சற்குணர் ஆகியோரிடம் தமிழ் படித்தார். பின்னர் நீதிக்கட்சி நடத்திய திராவிடன் இதழின் ஆசிரியர் குழுவில் சேர்ந்தார். ஓவியக்கலையில் கொண்ட ஆர்வத்தால் சில காலம் எழும்பூர் ஓவியப்பள்ளியில் படித்தார் குடும்பப் பொருளாதாரச் சூழல் காரணமாக ஆசிரியர் பயிற்சி பெற்று சாந்தோம் மாநகராட்சிப் பள்ளியில் ஆசிரியராகப் பணிக்குச் சேர்ந்தார்.

தனது விடுமுறை நாட்களில் தமிழகமெங்குமுள்ள வரலாற்றுச் சிறப்பு மிக்க இடங்களுக்கும், வழிபாட்டுத் தலங்களுக்கும் சென்று ஆய்வு செய்தார். தொல்லியல், கல்வெட்டியல், நாணவியல் ஆகிய துறைகளில் அரிய களப் பணியாற்றினார். தென்னிந்திய எழுத்து முறை கல்வெட்டுக்களைப் படித்து ஆராயும் திறன் பெற்றார். கன்னடம் மலையாளம் போன்ற மொழிகளையும் கற்றறிந்திருந்தார். இந்து சமய வரலாற்றாளர்கள் அதிகம் கவனம் செலுத்தாத சமண, புத்தசமய கோயில்களையும் தொல்லியல் களங்களையும் ஆய்வு செய்தார். இருமுறை (1963 – 64) சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவராகத் தேர்வு செய்யப்பட்டார்.

வேங்கடசாமியின் தமிழ்ப்பணியை பாரதிதாசன் பின்வரும் பாடல் மூலம் பாராட்டியுள்ளார்.

## 12. பேரறிஞர் அண்ணா (பாரதம்)

சொல்வன்மைமிக்க பேரறிஞர் அவர்கள் தமிழகத்தின் காஞ்சி மாநகரில் திரு.நடராசர் - திருமதி.பங்காரு அம்மையார் என்னும் இருவருக்கும் கி.பி.1909ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 15-ஆம் நாள் பிறந்தார். இவரது இயற்பெயர் அண்ணாதுரை.

சென்னை, பச்சையப்பன் கல்லூரியில் எம்.ஏ.பொருளாதாரம், படித்துப் பட்டம் பெற்றார். கி.பி.1930இல் இராணி அம்மையாரை மணந்தார்.

பெரியாரின் சீடரான இவர் திராவிட முன்னேற்றக் கழகத்தைத் தொடங்கினார். பல்வேறு எதிர்ப்புகளைச் சந்தித்தார். கி.பி.1967ல் தமிழக முதல்வராகப் பொறுப்பேற்றார். தோற்றத்தில் எளிமையும் பழகுவதற்கு இனிமையும் கொண்டவர். கடமை, கன்னியம், கட்டுப்பாடு இவையே இவரது கொள்கைகள். இவரே தமிழகத்தில் இரு மொழிக் கொள்கையை அறிமுகப்படுத்தினார். இவரை அடுக்குச் சொல் அண்ணா என்று போற்றுவர். கல்கியால் 'தமிழ்நாட்டுப் பெர்னாட்ஷா' என்று பாராட்டப்பட்டவர்.

இவரது புகழ்மிக்க நாடகங்களில் வேலைக்காரி, ஓர் இரவு, சந்திரமோகன், நீதிதேவன் மயக்கம் என்பனவும் அடங்கும். திராவிட நாடு, காஞ்சி ஆகிய இதழ்களின் ஆசிரியராகவும் இருந்தார்.

இவர் 1969-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 3-ம் நாள் இயற்கை எய்தினார். பல சாதனைகளுக்குச் சொந்தக்காரரான இவரது இறுதி ஊர்வலமும் சாதனை படைத்தது. 50 இலட்சம் மக்கள் கண்ணீர் வடித்துச் சென்றனர். உலகின் மிகப்பெரிய மரண ஊர்வலம் இது, என்று கின்னஸ் குறித்துள்ளது.

இவருடைய சிறு நாடகமான 'பாரதம்' நமக்குப் பாடப்பகுதியாக உள்ளது. இந்நாடகம் 'பாரதம்' எனும் தொகுப்பு நூலில் உள்ளது.

## 13. டாக்டர் ஆறு அழகப்பன் (கொல்லிப்பாவை)

இராமநாதபுரம் மாவட்டம் ஆத்தங்குடியில் 10.08.1937ல் பிறந்த இவர் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் முதுகலை பயின்று அப்பல்கலைக் கழகத்திலேயே பணியில் சேர்ந்தார். படிப்படியாகப் பணி உயர்வு பெற்றுத் தமிழ்த் துறைத் தலைவரானார். இடையில் சில ஆண்டுகள் சென்னை எழும்பூரில் தமிழ், வடமொழி பிற இந்தி மொழி ஆராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநராகவும் பணிபுரிந்தார்.

நாட்டுப்புறவியலும் நாடகமும் இவருக்கு இரு கண்களாக விளங்குவன. நாட்டுப்புறவியலில் 'தாலாட்டுகள் ஐந்நாறு' என்ற தலைப்பில் ஆய்வு செய்து எம்.லிட். பட்டமும், நாடகத்துறையில் 'தமிழ் நாடகங்களின் பரிணாம வளர்ச்சி' என்ற தலைப்பில் ஆய்வு மேற்கொண்டு முனைவர் (டாக்டர்) பட்டமும் பெற்றார்.

நாட்டுப்புறப் பாடல்கள் பலவற்றைச் சேகரித்த இவர் அப்பாடல்களின் அமைப்பையும் வகைகளையும் அவை வரலாற்றிற்குத் துணையாக அமைவதையும் விளக்கும் வகையில் நாட்டுப்புறப் பாடல்கள் - திறனாய்வு என்ற அரிய நூலை வெளியிட்டுள்ளார்.

நாடகத் தமிழிலும் நாடகம் படைத்தல், நாடகம் பற்றி ஆராய்தல், நாடகத்திற்கென இதழ் நடத்துதல் என மூவகையில் செயலாற்றியிருக்கிறார். வரலாற்று நாடகங்கள், வாழ்க்கை வரலாற்று நாடகங்கள், எள்ளல் நாடகங்கள், இலக்கிய நாடகங்கள் என ஐவகை நாடகங்களைப் படைத்துள்ளார்.

சங்க இலக்கியப் பாக்கள் தரும் செய்திகளின் அடிப்படையில் இவரால் புனையப்பட்ட நாடகங்களின் தொகுப்பாக 'நாடகச் செல்வம்' என்ற நூல் விளங்குகிறது. அந்த நாடகங்களுள் ஒன்றான 'கொல்லிப்பாவை' இங்குப் பாடமாக இடம் பெற்றுள்ளது.

## 14. கி.ராஜநாராயணன் (நாற்காலி)

கி.ரா என்று சுருக்கமாக அழைக்கப்படும் கி.ராஜநாராயணன் (பிறப்பு 1922) கரிசல் இலக்கியத்தின் தந்தை என்று கருதப்படுபவர். கோவில்பட்டியின் அருகில் உள்ள இடைசெவல் கிராமத்தைச் சேர்ந்தவர். 1958ல் சரஸ்வதி இதழில் இவரது முதல் கதை வெளியானது. இவரின் முதல் கதை வெளியானது. இவரின் கதையுலகம் கரிசல் வட்டாரத்து மக்களின் நம்பிக்கைகளையும், ஏமாற்றங்களையும் வாழ்க்கைப்பாடுகளையும் விவரிப்பவை.

கரிசல் வட்டார அகராதி என்று மக்கள் தமிழுக்கு அகராதி உருவாக்கிய முன்னோடி இவரே.சாகித்ய அகாடமி விருது, இலக்கிய சிந்தனை விருது, தமிழக அரசின் விருது, கனடா தமிழ் இலக்கியத் தோட்டத்தின் 2016-ம் ஆண்டுக்கான தமிழ் இலக்கியச் சாதனை விருது உள்ளிட்ட தமிழின் முக்கிய இலக்கிய விருதுகள் பெற்ற, தொண்ணூறு வயதான கி.ரா. தற்போது புதுச்சேரியில் வாழ்ந்து வருகிறார்.

## 15. வளவ.துரையன் (சேலத்தார் வண்டி)

அ.ப.சுப்பிரமணியன் என்கிற வளவ.துரையன் விழுப்புரம் மாவட்டத்தைச் சேர்ந்த வளவனூர் என்கிற கிராமத்தில் 15.07.1949 இல் பிறந்தவர்.

தொடக்கப்பள்ளி ஆசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ளார். பட்டிமன்றம், கவியரங்கம் தனிச்சொற்பொழிவு என்று பேச்சுதிறனால் மேடையாளுமை பெற்று விளங்கி வருகிறார். காலச்சுவடு, கணையாழி, உயிர்மை என பல சிற்றிதழ்களில் தொடர்ந்து தமிழ்ப்படைப்புகளை வெளியிட்டு வருகிறார். சங்கு என்றொரு சிற்றிதழையும் முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக நடத்தி வருகிறார்.

1967 முதல் இன்று வரை தொடர்ந்து எழுதி வரும் வளவ.துரையனின் படைப்பாக்கத்தில் இரண்டு நாவல்களும், ஐந்து சிறுகதைத் தொகுப்புகளும் நான்கு கட்டுரைத் தொகுப்புகளும் ஆறு கவிதைத் தொகுப்புகளும் ஒரு பயணக் கட்டுரை நூலும் வெளிவந்துள்ளன.

இவர், தமது இலக்கியபடைப்புகளுக்கு திருப்பூர் தமிழ்சங்கம் விருது, கரூர் திருக்குறள் பேரவை விருது, கம்பர் பாரதி இலக்கியப் பேரவை விருது, தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமறைவிருது, சென்னை கவிஞர் தாராபாரதி அறக்கட்டளை விருது, சென்னை கவிதை உறவு பரிசு, தஞ்சை முனைவர் அறிவுடை நம்பி நினைவுப்பரிசு ஆகியவை பெற்றிருக்கிறார்.
தற்போது கடலூரில் வசித்து வருகிறார். கடலூரில் கூத்தப்பாக்கம் என்ற பகுதியில இலக்கியச் சோலை என்ற தமிழமைப்பை இருபது ஆண்டுகளாக நடத்தி வருகிறார்.

---


## நன்றி

1.) பொதுத்தமிழ் - திருவள்ளுவர் பல்கலைக்கழகம்; சேர்க்காடு.

2.) பாவைக் கையேடு - பாவை புத்தகக் குழுவினர்; மதுரை.


---